# சேலம் கோவில்கள்




*This book is published with the Financial Assistance of Tirumala Tirupathi Devasthanam Under their scheme aid to Publish Reglious books*


## சந்தியூர் ஏ. கோவிந்தன்



## பிரியா பதிப்பகம்

2/10, முத்தாக்கவுண்டர் தோட்டம்,
சந்தியூர் - அஞ்சல்,
மல்லூர்- வழி
சேலம் - மாவட்டம் - 636 203

# நூல் விபரம்

**சேலம் கோவில்கள் (கட்டுரைகள்)** ✣ ஆசிரியர் : சந்தியூர் ஏ.கோவிந்தன் ✣ முதல் பதிப்பு 2007 ✣ பதிப்புரிமை (c) : ஆசிரியருக்கு ✣ எழுத்துவகை : 10 புள்ளி ✣ நூல் அளவு : 1/8 டெமிசைஸ். ✣ படிகள் : 1000 படிகள் ✣ பக்கங்கள்: 128 ✣ மொழி: தமிழ் ✣ அச்சாக்கம் : கல்கி கம்ப்யூட்டர் பிரிண்ட், சேலம் - 1 ✣ பைண்டு : செக்சன் தையல் ✣ வெளியீடு : பிரியா பதிப்பகம், சந்தியூர் - அஞ்சல், மல்லூர் (வழி), சேலம் மாவட்டம். பின் : 636 203.

**விலை : ரூ.60/-**



**SALEM KOVILKAL (ESSAYS)** ✣ Author : Santhiyur A. Govindan ✣ First Edition 2007 ✣ Copy Right (c) : Author ✣ letter size : 10 points ✣ Book size: 1/8 Demy ✣ copies:1000 ✣ page: 128 ✣ Type Set & Printing : Kalki Computers Printers, Salem - 636 001 ✣ Language: Tamil ✣ Binding: Section Stitching ✣ Publisher : Priya pathipagam, Santhiyur (Po), Mallur - Via, Salem Dt. Pin: 636 203.

✣ **Price : Rs.60/-**

✣ ISBN 81-902729-1-0

# முன்னுரை

'சேலம் கோவில்கள்' இந்நூல் தொகுப்பில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் அனைத்தும் நூலாசிரியரால் பல்வேறு காலக்கட்டங்களில் எழுதப்பட்ட வார, மாத இதழ்களில் வெளியானவைகளின் தொகுப்பாகும். தற்போதைய சேலம் மாவட்டம் தர்மபுரி, கிருஷ்ணகிரி, நாமக்கல் ஆகியவற்றை கொண்டது. முதலில் சேலம் மாவட்டமாகயிருந்தது. பிறகு தருமபுரி பிரிந்து தனிமாவட்டமானது. சேலம், நாமக்கல் சேர்ந்து சேலம் மாவட்டமாக இருந்தது, பின்னர் சேலத்திலிருந்து நாமக்கல்லையும், தருமபுரியிலிருந்து கிருஷ்ணகிரியும் பிரிந்து விட்டன.

சேலம் கோவில்கள் தொகுப்பில் சேலம், நாமக்கல் மாவட்ட கோவில்கள் பற்றிய கட்டுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. முந்தைய காலத்தில் பல்வேறு மதங்கள் வளர்ச்சி பெற்றிருந்தாலும் சைவம், வைணம் இரண்டும் மட்டும் சிறப்பாக போற்றப்பட்டன. அரசர்கள், குறுநிலமன்னர்கள், பாளையக்காரர்கள், வணிகர்கள் அனைவரும் கோவில்களுக்கு மானிய நிலங்கள், பொற்காசுகள் வழங்கி இறைப்பணி சிறக்க பாடுப்பட்டிருக்கின்றனர்

ஒருசில கோவில்கள் மட்டுமே பெரிய மன்னர்களின் கொடையினால் வளர்ச்சியடைந்ததாக அங்குள்ள கல்வெட்டு செய்திகள் மூலம் அறிய முடிகிறது. திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோவில் முழுக்க சிற்றரசர்கள், பாளையக்காரர்களின் மானியத்தால் மட்டுமே வளர்ச்சி பெற்றிருக்கிறது.

சிற்பக்கலைக்கு பெயர் பெற்ற தாரமங்கலம் கைலாசநாதர் கோவிலை ஓய்சாளன் வீரராமநாதன் கி.பி 1286 ஆம் ஆண்டு கட்டியுள்ளார். பின்னர் கெட்டி முதலிகள் காலத்தில் கோவில் திருப்பணிகள் செய்யப்பட்டிருக்கின்றன. யாழியின் சிற்பங்கள், ரதி மன்மதன் சிற்பம், தாமரையைக் கொத்தும் கல்கிளிகள், ஒரே கல்லினால் செய்யப்பட்ட கல் சங்கிலி போன்றவை நம்மை வியப்பில் ஆழ்த்துபவை.

இதே போல் திருச்செங்கோட்டிலும் சிற்பங்கள் மிகுதி. இக்கோவிலில் மூலவர் லிங்க வடிவில்லாமல் ஆண்பாதி, பெண்பாதி கலந்த நிலையில் காட்சி தருவது சிறப்பு. இது போன்ற அமைப்பு வேறு எங்கும் காணமுடியாது. குழந்தைப்பேறு இல்லாதவர்கள் இங்குள்ள 'வரடிக்கல்லை' சுற்றி வந்தால் குழந்தைபேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை.

நாமக்கல் நகரிலுள்ள நரசிம்மர் குடைவரை சிற்பம், வைகுண்ட பெருமாள் குடைவரை போன்றவை மிகவும் பழமை வாய்ந்தவை. அக்கோவில்களின் திருப்பணிகள் அதியமான் பாரம்பரையினரால் செய்யப்பட்டதாக கருதப்படுகிறது. அங்குள்ள குடைவரைச் சிற்பங்கள் மிகவும் வரலாற்று சிறப்பு வாய்ந்தவையாக கருதப்படுகிறது.

கொல்லிமலை அறப்பளிஸ்வரர் கோவில் சமணர் பள்ளியாக இருந்து பின்னர் சிவத்தலமாக மாற்றிப்பட்டிருக்கிறது. அங்கு சமணர் குறித்த தடயங்கள் நிறைய கிடைத்திருக்கின்றன. சேலம் (சுகவனேஸ்வரர்) கிளிவண்ணமுடையார் கோவில் மிகப்பழமையான சிவத்தலம் அங்குள்ள கல்வெட்டுகள் கிளிவண்ணமுடை யார் கோவில் என்றே குறிப்பிடுகின்றன. பின்னர் சுகவனேஸ்வரர் ஆலயம் என வழங்கப்பட்டு வருகிறது.

பேளூர் தான்தோன்றீஸ்வரர், ஆத்தூர் காயநிர்மலேஸ்வார், ஆறகளூர் காமநாதேஸ்வரர், கரபுரநாதர் ஆலயம் கஞ்சமலை (காலங்கி)சித்தேஸ்வரா கோவில் குறித்த கட்டுரைகளும், நாமக்கல் ஆஞ்சநேயர், தாரமங்கலம் கைலாச நாதர் ஆலய சிற்பங்கள் குறித்த கட்டுரைகளும் இந்நூலுக்கு வலுக்கூட்டுபவை.

கோவில்களுக்கு வழங்கப்பட்ட மானியங்கள் கொடைகள் குறித்த தகவல்களும் முக்கிய கல்வெட்டுகளும் செய்தி இந்நூலில் இடம் பெற்றிருக்கிறது. சேலம்,நாமக்கல் கோவில்கள் குறித்த முழு விபரங்கள் அறிய விரும்புவோர் அவசியம் வாங்கி படிக்க வேண்டி நூலாகும்.

பதிப்பகத்தார்

# என்னுரை

இரண்டாண்டுக்கு மேலாக சேலம், நாமக்கல் மாவட்ட கோவில்கள் குறித்த கட்டுரைகள் குமுதம் பக்திஸ்பெஷல் ஞான ஆலயம், ஓம்சக்தி, ராணி, மாலைமுரசு, தினத்தந்தி உள்ளிட்ட இதழ்களில் எழுதி வந்தேன். அவைகளின் தொகுப்பு வடிவமே சேலம் கோவில்கள்.

இந்த தொகுப்பில் கோவில் வரலாறு குறித்த செய்திகள் இடம் பெற்றிருந்தாலும், கோவில் பிரகாரங்களில் செதுக்கப்பட்டுள்ள கல்வெட்டு செய்திகள், மானியங்கள், கொடைகள் வழங்கப்பட்டுள்ளமைக்கான சான்றுகள், கோவிலையொட்டியுள்ள கோட்டைகள் பற்றிய முழு விபரங்களும் இந்நூலில் தந்துள்ளேன்.

இந்நூலில் நாமக்கல் ஆஞ்சநேயர், நரசிம்மர் குடைவரை, வைகுண்டபெருமாள் குடைவரைகள் குறித்து விரிவான தகவல்களை வெளியிட்டிருக்கிறேன். மேற்கண்ட இரு குடைவரைசிற்பங்கள் குறித்து விரிவான தளத்தில் ஆய்வு செய்து தன்னிடமிருந்து தகவல்களை தந்து நூல் சிறப்பாக வெளியாக முக்கிய காரணியாக இருந்தவர். எழுத்தாளர் சேலம்.பா.அன்பரசு அவர்கள். அவரின் ஊக்குவிப்பும், நெறிப்படுத்துதலும் இல்லையென்றால் இந்த நூல் நிச்சயம் சாத்தியப்பட்டிருக்காது. நூல் வெளியாகும் இந்த நேரத்தில் அவருக்கு எனது நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

சேலம் மாவட்ட கல்வெட்டுகள் குறித்து எப்போது தகவல் கேட்டாலும் கல்வெட்டு படிகள் கொடுத்து உதவும் நாமகிரிப்பேட்டை இரா. துரைசாமி அவர்களுக்கும், இந்நூல் சிறப்பாக அச்சிட்ட ஜோதி அச்சகத்தாருக்கும், நூல் வெளியிடவும், கட்டுரைகளை வெளியிட்டும் ஊக்கப்படுத்திய சப்தகிரி இதழாசிரியருக்கும், இந்நூல் வெளிவருவதற்கு நிதி உதவி வழங்கிய திருமலை திருப்பதி தேவஸ்தான செயல் அலுவலர் மற்றும் பதிப்பாசிரியருக்கும் என் உள்ளார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புடன்,

**சந்தியூர்.ஏ.கோவிந்தன்,**

**சேலம்**

# பொருளடக்கம்

# கோட்டைப் பெருமாள் கோவில்

சேலம் நகரின் திருமணிமுத்தாற்றின் மேல் கரையில் அமைந்துள்ளது, கோட்டை பெரும்மாள்கோவில். தினமும் இறைவனிடம் பணம், வீடு, திருமணம், தொல்லைகள் நீங்க வேண்டும், நோய் இல்லா வாழ்க்கை என ஏதாவது வேண்டும் வேண்டும் என கேட்டுக் கொண்டே இருக்கும் மனநலை உள்ள நமக்கு, நினைத்தது நிறைவேறாமல் போனால், இறைவன் நம்மை கைவிட்டு விட்டான்.

நாம் இனி எப்படி இவ்வுலகில் வாழவே முடியாதே என்று இறைவன் மீது பற்றுதல் குறைந்து மனசோர்வு ஏற்படுகிறது.

சேலம் கோட்டை பெருமாள் கோயிலில் எழுந்தருளியுள்ள சுந்தரவல்லி, அழகிரிநாதர் திருத்தலம் ஐம்பதிகளில் ஒன்றாக திகழ்வதால், கேட்டவரம் எதுவானாலும், ஈந்தருளும் வல்லமை கொணட்து. இத்தலம் ஐம்பதிகளையும் ஒன்று சோ பெற்றிருப்பதே சிறப்பு.

தெய்வம் (தேவர்கள் தாமாக வந்து அமர்ந்த இடம்) ஆருஷம் (மகரிஷியின் வேண்டதலுக்கு இணங்கி அமர்ந்த இடம்), புராணம் (புராண வரலாறுகளால் சிறப்பு வாய்ந்த இடம்), திவ்யம் (மஹான்களால் பூஜித்தப்பட்ட இடம்), மானுஷம் (மக்களுக்கு விரும்பிய வரம் அளிக்கும் இடம்) என ஐம்பெரும் சிறப்புகளை கொண்ட தலம் இது.

பிருங்கு முனிவரின் வேண்டுகோளால், திருமாமகள் மாசிமக நன்னாளில் சுந்தரமலர் அணிந்து அழகிய சிறு குழவியாக தோன்றி அம்முனிவரின் வேண்டதலுக்கு இணங்க அவரின் திருமகளாக அழகிய வல்லி (சுந்தரவல்லி) என்ற சாற்று திருநாமத்தோடு (சேலம்) திருநகரில் வாழ்ந்ததாக கூறப்படுகிறது.

சேலம் சின்ன திருப்பதியில் ஸ்ரீநிவாச பெருமாள் சுந்தரவள்ளி பிராட்டியை அடைய வேண்டி தன்னை புற்றினுள் மறைத்து கொண்டு, அதனின்று 'மான்' உருவமாய் (பிரம்மசாரி)

வெளிப்பட்டு 'பிருகு' மஹரிஷியின் ஆஸ்ரமத்திற்கு வந்து பெண் கேட்டு சுந்தரவல்லியை திருமணம் செய்து கொண்டார். ஸ்ரீநிவாச பெருமாள் எழுந்தருளிய மண் புற்றை பக்தர்கள் வழிபட்டு வருகின்றனர்.

இக்கோவிலில் 'திருமண நிகழ்ச்சி' என்ற விழா நடைமுறை இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இந்நிகழ்ச்சி சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன் இருந்து இன்று வரை கடைப்பிடிக்கப்பட்டு வருவது தான் விசேஷம்.

அழகரிநாதர், சுந்தரவல்லியை இங்கு மான் வடிவில் தோன்றி பெண் பார்த்து மணம் முடித்த வரலாறு உள்ளதால், பெண் வீட்டார் மற்றும் மாப்பிள்ளை வீட்டார் கோவில் மண்டபத்தில் அமர்ந்து திருமண நிகழ்ச்சிகளை பேசி முடிக்கின்றனர். பல மாதங்கள் தடைப்பட்ட திருமணங்கள் கூட இங்கு பேசப்பட்ட பின் திருமணத்தில் முடிந்துள்ளது.

சேர, சோழ, பாண்டிய, பல்லவ, சாளுக்கியர் போன்ற மாமன்னர் காலத்தில் 'சதுர்வேதிமங்கலம்' என்ற பெயருடன் கோட்டை பெருமாள் கோவில் சிறப்பு பெற்று விளங்கிற்று.

சதுர்வேதிமங்கலம் என்பது நூற்றுக்கணக்கான வேத, சாஸ்திர, ஜோதிட, நீதித்துறை வல்லுநர்கள் ஆலய மண்டபங்களில் அமர்ந்து சகல வழக்குகளும் தீர்க்கப்பட்டு நீதி வழங்கும் இடம் 'சதுர்வேதிமங்கலம்' என அழைக்கப்பட்டு வருகிறது.

கோட்டை பெருமாள் கோவில் திருவிழாக்கள் ஆண்டு முழுவதும் சிறப்பாக நடக்கிறது.

# நாமக்கல் ஆஞ்சநேயர்

*ராமாயண காலத்தில் சஞ்சீவி மலையுடன் ஆஞ்சநேயர் இலங்கைக்குச் சென்ற போது அந்த மலையின் சிறு பகுதி விழுந்ததில் உருவானது தான் நாமக்கல் மலை என்பது புராண நம்பிக்கை.*

*இவ்வூர் முன்பு 'திரு. ஆரைக்கல்' என்று அழைக்கப் பட்ட செய்தி கல்வெட்டுகளில் காணப்படுகிறது.*

*இதுவே காலப் போக்கில் 'நாமக்கல்' என்றாயிற்று. இந்த ஊருக்கு 'நாமகிரி' என்றொரு பெயரும் உண்டு.*

*நாமக்கல் நகரின் நடுமையத்தில் அமைந்துள்ள நாமக்கல் கோட்டை இருநூறு அடி உயரமான ஒற்றைக்கல் குன்றின் மீது கட்டப்பட்டிருக்கிறது.*

*இக்கோட்டை கருங்கல், செங்கல் மற்றும் காரைக் கலவையினால் கட்டப்பட்டுள்ளது.*

*கோட்டைப் பரப்பின் மீது காவலர் கண்காணிப்பு நிலைகளும், பீரங்கி நிறுத்திமிடங்களும் உள்ளன. துப்பாக்கியால் சுடுவதற்கு தோதான துவாரங்களும் உள்ளன. பெரிய தானியக்கிடங்கு ஒன்றும் வெடிமருந்துக்கிடங்கு ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளன.*

*சேந்தமங்கலம் பாளையுக்காரன் இராமச்சந்திர நாயக்கன்(17 ஆம் நூற்றாண்டு)இக்கோட்டையைக் கட்டினான். இதற்கு முன்னால் கட்டப்பட்டது என்பவர்கள் 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சடையவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு கோட்டையினுள் இருப்பதே சான்றாகக் கூறுவர்.*

*பிந்தையது என்போர், நூழைவாயிலில் காணப்படும் மைசூர் உடையவர் அரசு இலச்சினையாக சிங்கத்தை (18 நூ) முன்நிறுத்துவர்.இக்கோட்டையின் உட்பரப்பு சுமார் 1.5 ஏக்கர் அளவுடையது. இதன் இராணுவப்பயன் குறைவானதே.*

தென் தமிழகத்திற்குள் வடக்கிருந்து பாயும் நேர்ச்சாலையில் வரும் பகைவர்களை கண் காணிக்கும் மேடையாகவும், தானியக் கிடங்காகவும் 18 ஆம் நூற்றாண்டு வரை இக்கோட்டை பயன்பட்டது.

நாமக்கல் மலையைக் குடைந்து அமைத்துள்ள நரசிம்ம சுவாமி கோவில் ராம அவதாரத்திற்கு முந்தைய நரசிம்மர் அவதாரத்தை எடுத்துக் காட்டுகிறது. நரசிம்மர் கோவில் மிகப் பழமையான பல்லவர்கால குடைவரைக் கோவிலாகும். மாமல்லபுரத்திலுள்ள கற்சிற்பங்கள் உலகப் புகழ் பெருமளவுக்கு சிறப்பாய் செதுக்கப்பட்டன.



பின்னர் அவர்களின் சிற்பங்கள் தமிழகம் முழுவதும் பரவின. மதுரைக்கு அருகேயுள்ள திருப்பரங்குன்றம் முருகன் கோவில் நாமக்கல் நரசிம்மர் கோவில் போன்றவை சிறந்த உதாரணங்களாகும்.

அழகிய சிற்பங்களுடன் நரசிம்ம சுவாமி கோவில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. நரசிம்ம அவதாரத்தில் எதிரியை சம்ஹாரம் செய்த ஆவேசத்தோடு காட்சி தருகிறார். அவரது கை மற்றும் நெஞ்சுப் பகுதியில் பச்சை ரத்தம் உறைந்தது போன்று இன்றும் நாம் காணலாம்.

நாமகிரித் தாயார் சன்னதி, கிழக்கு நோக்கி உள்ளது. வைகுண்ட நாராயணன், இரணிய சம்ஹாரமூர்த்தி, வாமன அவதாரம், வராக மூர்த்தி ஆகிய திருவுருவங்கள் இங்கே இடம் பெற்றுள்ளன.

## அனந்தசாயி குடைவரைக் கோயில்

அனந்தசாயி குடைவரைக் கோயிலின் இடைக்கட்டு மண்டபம் ஒரு குறுகிய மண்டபம் ஆகும். மூலத்தானத்ததைவிட அகலமானது. நுழைவாயிலில் இரு தூண்கள் உள்ளன. குடைவரைக் கோயிலைப் பாதுகாப்பதற்காகப் பிற்காலத்தில் சுவர் எழுப்பி, மூன்று வாயில்களை அமைத்திருக்கிறார்கள்.

மூலத்தானத்தின் முன்புறம் நான்கு தூண்கள் காணப்படுகின்றன. திருமால் தனது பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டுள்ளார். வழக்கமான பரிவார தேவதைகள்.

அனந்தசாயி மூலவரின் இருபுறங்களிலும் சுவரையொட்டி இடைக்கட்டு மண்டபத்தின் பக்கச் சுவர்களிலும் சிற்பங்கள் காணப்படுகின்றன. அனந்தசாயி வடிவத்தின் இடப்புறச்சுவரில் பாலநரசிம்மர் வடிவமும் அதை ஒட்டிய பக்கச்சுவரில் சங்கர நாராயணர் வடிவமும் காணப்படுகின்றன.

சங்கர நாராயணர் உருவம் என்பது இடது பாதி திருமால் வலது பாதி சிவபெருமான் வடிவம் கொண்டது. வாமன புராணத்தில், திருமால் ஒரு முனிவருக்கு உபதேசம் செய்யும் போது அவரும் சிவபெருமானும் ஒருவரே என்பதை உலக மக்களுக்கு உணர்த்துவதே சங்கர நாராயணர் வடிவத்தின் நோக்கமாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இடது பக்கம் உள்ள திருமால் வடிவத்தின் ஒருகை சங்கைத் தாங்கியுள்ளது. மற்றொரு கை இடுப்பில் ஊன்றியுள்ளது. வலது பக்கம் உள்ள சிவபெருமானின் ஒரு கை பாம்பைத் தாங்கியுள்ளது. மற்றொரு கையில் பாயும் மான் உள்ளது.

திருமாலின் பகுதியில் உள்ள தலையில் மகுடமும்,

சிவபெருமான் பகுதியில் உள்ள தலையில் பிறைநிலாவும் காணப்படுகின்றன. திருமாலின் காதில் மகர குண்டலமும் சிவபெருமானின் காதில் சர்ப்ப குண்டலமும் காணப்படுகின்றன. சங்கர நாராயணர் சிற்பம் சிறிய மேடை ஒன்றின் மீது நின்ற கோலத்தில் காணப்படுகிறது. இடுப்பிலிருந்து கணைக்கால் வரை ஆடை செதுக்கப்பட்டு உள்ளது.

சங்கர நாராயணர் சிற்பத்தைச் சூழ்ந்துள்ளபடி செதுக்கப்பட்டுள்ள சிற்பங்களில் ஐந்து ஆண் வடிவங்கள் மற்ற இரண்டு பெண் வடிவங்கள். இவை எதைக் குறிப்பிடுகிறது என்பதை ஊகித்து அறிய முடியவில்லை.

சங்கரநாராயணர் சிற்பத்துடன் இணைந்த சுவரில் பாலநரசிம்மர் சிற்பம் நின்ற நிலையிலும், இளைப்பாறும் நிலையிலும், கருணை ததும்பும், முகத்துடனும் காணப்படுகிறது. இடது கை சங்கும் வலது கை சக்கரமும் ஏந்தியுள்ளன. வலது பக்கமுள்ள மற்றொரு கை இடுப்பில் ஊன்றியுள்ளது. மார்பிலும், வயிற்றிலும் பல அணிகலன்கள் செதுக்கப்பட்டுள்ளன.

அனந்தசாயி திருவுருவத்திற்கு வலதுபக்கம் உள்ள சுவரில் மகாபலிச் சக்கரவர்த்தியின் உருவம் காணப்படுகிறது. இச்சுவருடன் இணைந்த பக்கச் சுவரின் கீழ் ஓரப்பகுதியில் திருமாலின் வாமன அவதாரச் சிற்பம் காணப்படுகிறது. மற்ற பெரும்பகுதி திரிவிக்கிரமன் சிற்பத்திற்காக விடப்பட்டுள்ளது.

வாமனாவதாரச் சிற்பம் இளம் பிரம்மச்சாரி வடிவில் குட்டையாகவும் இடக்கையில் குடை, வலக்கையில் பிச்சை ஏற்கும் பாத்திரம், இடுப்பில் ஆடை, மொட்டைத் தலையுடன் காணப்படுகிறது. வாமனனுக்கு மகாபலிச் சக்கரவர்த்தி தானம் தருவது போன்று காணப்படுகிறது. மகாபலியின் அமைச்சரும் வேறு எவரும் இங்கு இடம் பெறவில்லை.

வாமனன் வடிவம் செதுக்கப்பட்ட சுவரின் பெரும்பகுதியில் திரிவிக்ரமன் வடிவம் பெருமிதத்துடன் காணப்படுகிறது.

திரிவிக்கிரமன் உருவத்தின் வலது கால் தோள்பட்டை அளவிற்குத் தூக்கியுள்ளது. வலது கை, உயர்த்தப்பட்ட வலது காலை தொடுவது போல் நீண்டுள்ளது. மற்றொரு வலது கை மடங்கிய நிலையில் சக்கர ஆயுதத்தைத் தாங்கியுள்ளது. இடக்கையில் ஒன்று சங்கினை ஏந்தியுள்ளது. மற்றொரு கை இடுப்பில் ஊன்றியுள்ளது. இடுப்பு ஆடை கணுக்கால் வரையுள்ளது.

திருவிக்கிரமன் உருவத்தின் வலது காலின் கீழ் ஓரத்தில் கருடன் காணப்படுகிறது. மேல் பகுதியில் ஜாம்பவான் உருவம் பறக்கும் நிலையில் வலது கையில் ஒரு தடியை ஏந்தி இடக்கையில் உள்ள ஓர் இசைக் கருவியை அடிப்பது போல் காணப்படுகிறது.

ஜாம்பவானுக்கு வலப்பக்கமும், சங்கிற்கு மேல் பக்கமும் கந்தர்வர்கள் இருவர் வானில் பவனிவருவது போல் காணப்படுகிறது. திரிவிக்கிரமன் உருவத்திற்கு மேற்புறம் மேகங்களின் பின்னணியில் ஓர் ஆணும், பெண்ணும் காணப்படுகின்றனர். இவர்கள் கந்தர்வர்களாக இருக்கக்கூடும்.

மூலவராக உள்ள அனந்தசாயி உருவம் பாம்பணையில் பள்ளி கொண்டிருப்பது போல் செதுக்கப்பட்டுள்ளது இவ்வுருவம் மூலத்தானத்தின் பெரும் பகுதியை ஆக்கிரமித்து கொண்டுள்ளது. கார்கோடகன் என்னும் ஐந்து தலைகளையுடைய பாம்புப் படுக்கையில் ஆனந்த உறக்கம் கொண்ட நிலையில் காணப்படுகிறது திருமாலின் உருவம்.

இந்த மூலத்தானத்தின் தெற்குத்தூணில் பல்லவர் கிரந்த லிபியில் மானசாரா என்னும் பட்டப்பெயர் காணப்படுகிறது. மானசாரா என்னும் பட்டப்பெயர் குணசீலன் என்னும் அதியமானுக்கு உரியதாகும்.

திருமாலின் பாதங்களுக்கு அருகில் மது கைடபர் என்னும் இரு அசுரர்கள் திருமாலை தாக்கத் தாயாரான நிலையில் உள்ளனர். இடப்புறம் சந்திரன், வலப்புறம் சூரியன் உருவங்கள் உள்ளன.

யோக நித்திரையில் உள்ள அனந்தசாயி உருவத்தை ஒட்டி மேல்பகுதியில் உள்ள இடத்தில் தாமரை மலரில் பிரம்மா அமர்ந்துள்ளார். தாமரை மலரின் கொடி திருமாலின் கொப்பூழியில் இருந்து வளர்ந்துள்ளது. நாரதர், தும்புரு மற்ற முனிவர்கள் சூழ்ந்துள்ளனர்.

பாம்புப் படுக்கையின் மேடையில் சிறிய வடிவில் காணப்படும் திருவுருவங்கள், மார்க்கண்டடேயர், கருடன், வருணன், பிரம்மன், சிவபெருமான், தட்சன், சூரியன், தும்புரு, நாரதர், பிருகுமுனிவர், சாரங்கம், கதை, சக்கரம், கட்கம், சங்கு, மது - கைடபர்.

அனந்தசாயி குகையின் இடைக்கட்டு மண்டபம், மூலத்தானம், தூண்கள், சிற்ப வடிவங்கள் அனைத்தும் மலையின் கிழக்குச் சரிவில்குடைந்து செதுக்கப்பட்டவை.

காலை நேரத்திலேயே இக்குகைக் கோயிலுக்குப் போனால்தான் ஆர அமரக் கண்டு களிக்க முடியும்.

## நரசிம்ம சுவாமி குடைவரைக் கோயில்

நரசிம்ம சுவாமி குடைவரைக் கோயில் மலையின் மேற்குச் சரிவில் உள்ளது. நுழைவாயில் கோபுரம் கிடையாது.

நரசிம்மர் குடைவரை நீண்ட சதுர வடிவமுள்ளது. இடைக்கட்டு மண்டப முகப்பு நான்கு தூண்களையுடையது. இருதூண்க்ளின் இடைவெளி வாயிலாக அமைக்கப்பட்டு மற்ற பகுதி சுவர்எழுப்பி மூடப்பட்டுள்ளது.

அமர்ந்த நிலையில் உள்ள நரசிம்மர் உள்ள இடம் நான்கு தூண்களைக் கொண்ட உயரமான பகுதி. இதுவே நரசிம்மரின் மூலத்தானம் ; மேற்கு முகம். நரசிம்மர் சிற்பத்தின் இருபுறமுள்ள சுவர்களிலும் இடைக்கட்டு மண்டபத்தின் இருபக்கச் சுவர்களிலும் திருமாலின் அவதாரங்களை விளக்கும் படைப்புச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

நரசிம்மர் திருவுருவம் யோகநிலையில் சங்குசக்கரம் மற்றும் பரிவார தேவதைகளுடன் தங்கக் கவசத்தால் மூடப்பட்டுள்ளது.

## வைகுண்ட நாராயணர் சிற்பம்

இடைக்கட்டு மண்டபத்தின் இடப்பக்கச் சுவரில் இச்சிற்பம் காணப்படுகிறது. வைகுண்ட நாராயணர் நான்கு கைகளுடன் பாம்பணையில் அமர்ந்துள்ளார். அவருடைய தலையின் பின்பக்கம் பாம்பின் ஐந்து தலைகள் விரிந்த நிலையில் உள்ளன. உயர்த்தப்பட்ட இரு கைகளில் சங்கு சக்கரங்கள் ; கீழ் நோக்கியுள்ள இடக்கரம் இடது முழங்காலில் ஊன்றியுள்ளது. கீழ்நோக்கியுள்ள வலதுகை கடக முத்திரையுடன் உள்ளது. கடக முத்திரை என்பது சுண்டு விரல் நீண்டும் மற்ற மூன்று விரல்கள் பெரிய விரலை நோக்கியும் வளைந்துள்ள நிலை, காதில் மகா குண்டலங்கள், அகலமான கங்கணங்கள் இடுப்பில் ஆடை

வைகுண்ட நாராயணரின் இடது கீழ்ப்பகுதியில் பால நரசிம்மரின் அமர்ந்த கோலம். மனித உடல், சிங்கத்தின் தலையுடன் கூடிய நரசிங்க வடிவம். சாந்தமான அருள்புரியும் வடிவம். நான்கு கைகள். மேல் நோக்கிய வலது கை அபயக்கரம். மற்றொரு வலது கை கீழ்நோக்கி, மடங்கிய முழங்காலைத் தொட்டுக் கொண்டுள்ளது. மேல் தூக்கிய இடது கை சங்கு போன்ற ஒரு பொருளை ஏந்தியுள்ளது. கீழ்நோக்கிய இடது கை கடக முத்திரையுடன் உள்ளது. வைகுண்ட நாராயணருடன் பால நரசிம்மர் உள்ளது போன்ற சிற்பம் வேறெங்கும் காணப்படவில்லை.

வைகுண்ட நாராயணருக்கு வலப்பக்கம் சிவபெருமான் நான்கு கைகளுடன் காணப்படுகிறார். அவரது மேல் நோக்கிய வலது கையில் மான், கீழ்நோக்கிய மற்றொரு வலது கை இடுப்பில் ஊன்றியுள்ளது. மேல்நோக்கிய இடது கை அபயக்கரம் கீழ்நோக்கிய இடது கையில் பாம்பு, காதுகளில் சர்ப்ப (பாம்பு) குண்டலங்கள்.

சிவபெருமான் உருவத்திற்கு மேல்புறம் கூப்பிய கைகளுடன், சூரியன், நான்முகனுக்கு மேற்புறம் கூப்பிய கைகளுடன் சந்திரன் ஆகியோரின் மார்பளவுத் திருவுருவங்கள் காட்சியளிக்கின்றன.

கீழே பாம்பணையை ஒட்டி மார்க்கண்டேயர், மண்மகள் (பூதேவி) ஆகியோர் வணங்கும் நிலையில் காணப்படுகிறார்கள்.

வைகுண்ட நாராயணர் சிற்பம் மற்றும் அவ்வுருவத்தைச் சூழ்ந்துள்ள சிற்பங்கள் ஆகியவற்றை ஒட்டு மொத்தமாக வைத்துப் பார்க்கும் போது அது சிற்பக் கலைக்கே சவால்விடும் அளவுக்குக் காணப்படுகிறது.

**உக்கிரநரசிம்மர்** : மூலவராக அமர்ந்துள்ள யோக நரசிம்மருக்கு இடப்புறம் உள்ள சுவரில் கோபமே வடிவமான உக்கிரநரசிம்மர் சிற்பம் மட்டுமே காணப்படுகிறது. உயர்ந்த தோற்றம், எட்டுகைகள், வலப்பக்கம் நான்கு இடப்பக்கம் நான்கு. வலது காலை நிலத்தில் ஊன்றி, காலை சிறிய மேடை ஒன்றின் மீது வைத்துள்ளார் நரசிம்மர்.

இரண்ய கசிபு என்னும் அரக்கனின் வடிவம் சிறியதாகவும், நரசிம்மரின் வடிவம் பெரியதாகவும் சிற்பத்தில் காணப்படுகின்றன. இரண்யகசிபுவின் இடுப்பிலிருந்து உடலின் மேல்பகுதி முழுவதும் நரசிம்மரின் இடது தொடையின் மேல் கிடத்தப்பட்டுள்ளது. கைகள் இரண்டும் கீழ் நோக்கித் தொங்கும் நிலையில் உள்ளன. வலது கை வாளும் இடது கை கேடயமும் தாங்கியுள்ளன.

நரசிம்மரின் வலது பக்கக் கைகளில் ஒன்று இரண்யகசிபுவின் இடது காலை வலது தொடையின் மேல் தாங்கியுள்ளது. இடக்கைகளில் ஒன்று இரண்யனின் வலக்கையைப் பிடித்துள்ளது. நரசிம்மரின் ஒரு வலதுகையும் ஒரு இடதுகையும் இரண்யகசிபுவின் வயிற்றில் உள்ளங்கைகளின் அளவு மூழ்கியுள்ளது. வலது கைகளில் ஒன்று வில்லையும், மற்றொன்று சங்கையும் தாங்கியுள்ளன. நரசிம்மரின் முகம் சிங்க வடிவத்தில் கோபத்துடன் காணப்படுகிறது.

**வராக அவதாரச் சிற்பம் :**

ஒரு சமயம் இரண்யாட்சன் என்னும் அரக்கன் ஒருவன் நிலமகளை கடலுக்குள் கொண்டு போய் ஒளித்து வைத்து விட்டானாம். நிலமகளை மீட்டுக்கொண்டு வருவதற்காகத் திருமால் பன்றியாக உருவம் எடுத்துக் கொண்டு கடலுக்குள் மூழ்கி நிலமகளை, மீட்டு வந்தாராம். இந்த அவதாரத்தைக் குறிக்கும் சிற்பமே இங்கு காட்சி தருகிறது.

வராகத் திருவுருவம் (பன்றி) நீரிலிருந்து எழுவது போல இங்கு காட்சி தருகிறது. இடது கால் முழங்கால் அளவும் வலதுகால் கணைக்கால் அளவும் மறைந்துள்ளது. வராகத்திற்கு இரு கைகளே உள்ளன. நிலமகளை தனது இரு கைகளாலும் தாங்கியுள்ளார். வராகப் பெருமாள். நிலமகள் இருகரங்களாலும் அவரை வணங்குகிறாள். வராகப் பெருமாள் மனித உடலும் பன்றியும் தலையும் கொண்டு காட்சியளிக்கிறார்.

நான்கு வேதங்களைக் குறிப்பிடுவதற்கு அடையாளமாக வராகப் பெருமாளின் தலைக்கு மேல் நான்கு முகங்கள் காணப்படுகின்றன. கீழ்ப்புறம் வலது ஓரத்தில் இக்காட்சியை வியக்கும் வண்ணம் ஆதிசேடன். இடது பக்கம் காணப்படுவது கூப்பிய கரங்களுடன் நிலமகள். தன்னை இரண்யாட்சனிடமிருந்து காப்பாற்றிய திருமாலுக்கு நன்றி செலுத்துவது போன்ற நிலமகளின் வடிவம் ஆதிசேடனின் மனைவி என்றும் கருதலாம்.

**வாமன அவதாரச் சிற்பம் :**

நரசிம்மர் குடைவரைக் கோவிலின் இடைக்கட்டு மண்டபத்தின் வலப்பக்கச் சுவரில் வாமன அவதாரச்சிற்பம் காணப்படுகிறது. வராக அவதாரச் சிற்பத்தைப் போல் அல்லாமல் இச்சிற்ப வடிவம் தேவர்கள் பலரின் திருவுருங்களைக் கொண்டதாகும். இந்தச் சிற்பத் தொகுதியை இருபகுதிகளாகப் பிரிந்துக் கொள்ளலாம்.

திருமால் எடுத்துக்கொண்ட குட்டையான உருவம். மொட்டைத்தலை அந்தணர் வடிவம். இடது கையில் குடை, வலது கையில் தனது காலில் மூன்றடி நிலம் கேட்பது போல பிட்சா பாத்திரம், வாமனருக்கு எதிரில், மூன்றடி நிலம் தானமாகத் தருவது போல் கமண்டலத்துடன் காணப்படும் மகாபலி மன்னன். மகாபலி மன்னனுக்குப் பின்புறம் தானத்தை எப்படியும் தடுக்கும் நோக்கம் கொண்ட அவனது குரு சுக்கிராச்சாரியார். இந்த உருவங்களுக்கு மேல் ஒரு குதிரையின் தலை. அதன் கழுத்தில் இருந்து போகும் கயிறு ஒரு கம்பத்தில் கட்டப்பட்டுள்ளது அசுவமேத யாகத்தைக் குறிக்கும் அடையாளம்.

இச்சிற்பத் தொகுதியிலுள்ள மற்ற சிற்பங்கள் மகாபலியிடம் மூன்றடி நிலம் பெற்ற வாமனனாக வந்த திருமால் வானளாவிய தோற்றம் கொள்கிறார். ஓரடியால் நிலவுலகத்தையும். மற்றோர் அடியால் வானையும் அளக்கிறார். திரிவிக்கிரமனாகக் காட்சி தருகிறார். இடது கால் நிலத்தில் ஊன்றியும் வலது கால் தோள்பட்டை அளவு உயர்ந்தும் காணப்படுகிறது. வலப்பக்கம் இருகைகளில் ஒன்று கதாயுதத்தையும் மற்றொன்று தூக்கிய வலது பாதத்தைத் தொடும்படியும் உள்ளது. இடது கைகளில் ஒன்று சங்கினை ஏந்தியுள்ளது. மற்றொரு கை இடுப்பில் ஊன்றியுள்ளது. தலையில் உள்ள கிரீடத்தின் பின்பக்கம் ஒரு குடை காணப்படுகிறது. காதுகளில் மகர குண்டலங்கள் உள்ளன.

திரிவிக்கிரமன் சிற்பத்தின் வலது மேல்பக்கம் திருமாலின் சிறப்புகளை உலகத்திற்கு உணர்ந்த ஒரு இசைக்கருவியை ஒரு தடியால் முழக்கிக் கொண்டு வானில் வலம் வருகிறார். திருமாலின் வலப்பக்கம் ஒருவன் கைகளில் வாள், கேடயம் இவற்றுடன் தலைகுப்புற விழுகிறான். இவன் திரிவிக்கிரமனுடன் போராட வரும் மகாபலியின் மகன் ஆவான். வலதுபக்கம் கீழ்ப்பகுதியில் கருடன். மாவலிமன்னன் தானம் கொடுத்ததைத் தடுத்த சுக்கிராச்சாரியாரை கருடன் தண்டிப்பது போல் ஒரு சிற்பம் காணப்படுகிறது.

அனந்தசாயி குடைவரையில் காணப்படும் திரிவிக்கிரமன், வாமன அவதாரம், மாவலிமன்னன், நரசிம்மர் குடைவரைக் கோவிலில் உள்ள திரிவிக்கிரமன், வாமனன் இந்த இரண்டும் சிறந்த சிற்பங்களாகும்.

இக்கோவிலின் திருப்பணிகளை பல்லவர்கள் பெண் வழிப்பேரன் அதியேந்தி குணசீலன், மற்றும் திருமலை நாயக்கர்கள் கி.பி.11,12ம் நூற்றாண்டில் செய்திருக்கின்றனர்.

நரசிம்ம சுவாமியை பிரதோஷ காலங்களில் வழிப்பட்டால் சகல துன்பமும் நீங்கி நலன் கிடைக்கும். இத்தலத்தில் பிரம்மா, ஈஸ்வரன், நரசிம்மர் மூவரும் ஒரே மேடையில் வீற்றிருந்து அருள்பாலிக்கிறார்கள்.

சென்ற நூற்றாண்டில் இந்தியாவுக்குப் பெருமை சேர்ந்த தமிழ் கணித மேதை ராமானுஜர். கணிதத்தில் பேரறிஞராகத் திகழ்ந்த இவர், லண்டனிலுள்ள கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் படித்து டாக்டர் பட்டம் பெற்று பின்னர் வெள்ளைக் காரர்களால் மிகப் பெரிய விருதான எஃப் ஆர்.எஸ் (ஃபெல்லோ ஆஃப் ராயல் சொசைட்டி) என்ற உயர்ந்த விருதும் பெற்றார்.

சென்னையிலிருந்து லண்டனுக்கு ராமானுஜர் புறப்பட்ட போது ஒரே எதிர்ப்பு. அந்நாளில் பிராமணர்கள் கடல் கடந்த போவது பாவம் என்று கருதப்பட்டது.

ராமானுஜர், லண்டன் போவதா? வேண்டாமா? என்று குழம்பினார். முடிவுகாண, நாமக்கல்லுக்கு வந்த அங்குள்ள நாமகிரித் தாயார் கோவிலில் இரவும், பகலுமாக மூன்று நாட்கள் தங்கினார். மூன்றாவது நாள் கனவில் போய் வா மகனே என்று விடை கொடுத்தார். நாமகிரித் தாயார். அதன் பின்னரே ராமானுஜர் லண்டன் போய் உலகப் புகழ் பெற்றார்.

எவ்வளவு பெரிய கணக்காய் இருந்தாலும் மனக்கணக்காகவே விடை கண்டுபிடித்து விடுவார். ராமானுஜர் உங்களால் இது எப்படி முடிகிறது என்று அவரிடம் கேட்டார்கள்.

“நாமகிரித் தாயார் என் மனதில் தோன்றி விடை சொல்லுகிறார்” என்று ராமானுஜர் பதில் அளித்தார் என்கிறது அவரது வாழ்க்கைக் குறிப்பு.

நாமகிரித் தாயாரின் அருளுக்காக தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும், வட நாட்டிலிருந்தும் பக்தர்கள் வருகிறார்கள்.

நரசிம்மர் சன்னதியின் எதிர்ப்புறம், பெருமாளை வணங்கியபடி அனுமன் சிலை இருக்கிறது. 18 அடி உயரமுள்ள அனுமன், நின்ற கோலத்தில் சாந்த மூர்த்தியாக காட்சி தருகிறார். இவருக்கு வடைமாலை சாத்தி வழிபட, ராகு, கேது, தோஷங்கள் விலகும் என்பது நம்பிக்கை.

சகலதோஷங்களையும் நீக்கும் சக்தி அனுமனுக்கு இருப்பதால் இங்கு நிறைய பக்தர்கள் கூடுகிறார்கள். நாமக்கல்லில் அனுமன் ஜெயந்தி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

இங்குள்ள ஆஞ்சநேயருக்கு வடைமாலை, அபிஷேகம், வெண்ணெய் சாத்துதல் உகந்தது. நாமக்கல் அனுமன் மேலே உயரமாக வளர்வதாக இங்குள்ள மக்கள் நம்புகிறார்கள். ஆகையால் அவரது தலைக்கு மேலே கூரை இல்லாமல் வைத்திருக்கிறார்கள்.

இங்குள்ள நாமகிரித் தாயாரை வழிப்பட்டால் இச்சா சக்தியான ஆசையும்,நரசிம்மரை வழிப்பட்டால் ஞான சக்தியான கல்வியையும், ஆஞ்சநேயரை வழிப்பட்டால் கிரியா சக்தியான காரியா அனுகூலமும் கிட்டும்.

இக்கோவிலில் தேர்திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சித்திரையில் தமிழ்ப்புத்தாண்டு பூஜைகள் வைகாசியில் நரசிம்ம ஜெயந்தி, ஆடியில் 18-ம் பெருக்கு. ஆடிவெள்ளி. ஆவணியில் கிருஷ்ண ஜெயந்தி, புரட்டாசியில் நவராத்திரி விழா, ஐப்பசியில் தீபாவளி, கார்த்திகை தீபம். மார்கழி வைகுண்ட ஏகாதசி. மாசிமகம். பங்குனியில் 15 நாட்கள் தேர்த் திருவிழா என வெகுவிமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

# சேந்தமங்கலம் தத்தகிரி முருகன் கோவில்

*பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் ஒரே இடத்தில் கொண்ட கோவில் வரலாறு சிறப்புமிக்கது. 3 தலை 6 கைகளுடன் ஒரே உடலமைப்பு கொண்டு பக்தர்களுக்கு காட்சி அளிப்பவர் தத்தாத்ரேயர்.*

*ஆத்ரேய கோத்திரத்தில் உதித்த அத்ரி மகரிஷியும், அவரது மனைவி அனுசுயா தேவியும் குழந்தை வரம் வேண்டி மனம் உருகி காசியில் இருந்து புறப்பட்டு வந்தனர். அவர்கள் நாமக்கல் மாவட்டம் கொல்லிமலையில் உள்ள சிவதலத்திற்கும் (அறப்பளீஸ்வரர்கோவில்) சேந்தமங்கலம் அருகே உள்ள நைனா மலை விஷ்ணு தலத்திற்கும் (வரதாஜபெருமாள் கோவில்) இடையில் வரும் போது , பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவருமே குன்றில் ஜோதி சொரூபமாக காட்சி தந்து அவர்களுக்கு தத்துப்பிள்ளையாக (தத்து ஆத்ரேயன் தத்தாத்ரேயன்) தத்தாத்ரேயர் பிறந்தார் என கூறப்படுகிறது.*

*இந்த தத்தாத்ரேயரை நாட்டு மக்களுக்கு எடுத்துக் காட்டியவர் சுயம் பிரகாச சரஸ்வத் அவதூத பரம்பரையை சேர்ந்த இவர் 1984 ல் ஜீவசமாதி அடைந்தாா.*

*அவர் ஜீவசமாதி அடைவதற்காக, தத்தாத்ரேய சுவாமிகள் பாதத்துக்கு அடியில் சமாதிகட்டி அதில் 17 ஆண்டுகளாக காத்திருந்தார். தத்தகிரி மலையில் அதை நாம் காணலாம். தத்தாத்திரயரின் அடிப்பகுதியில் சுயம்பிரகாச சரஸ்வத் அவதூத சுவாமிகளுக்கு சமாதி கட்டப்பட்டு உள்ளது.*

*மூலஸ்தானத்தில் தத்தாத்ரேயர் கிழக்கு நோக்கி சிவன் முகத்திலும், தெற்கு நோக்கு பிரம்மா, முகத்திலும், வடக்குநோக்கியும் விஷ்ணு முகத்திலும் காட்சி அளிக்கிறார். தாத்தாத்ரேயருக்கு தெற்கு திசை நோக்கி முருகன் உள்ளது. முருகனுக்கு அவதூத கீதையை உபதேசம் செய்தவர். தத்தாத்ரேயர் ஆகும். எனவே, குரு சிஷ்ய சாசத்தில் முருகரை*

தன்பக்கத்தில் தத்தாத்ரேயர் வைத்துக் கொண்டார் என கூறப்படுகிறது.

மூலஸ்தானத்தை விட்டு கீழே இறங்கி வந்தால் சபா மண்டபம் காட்சி அளிக்கிறது. இந்த மண்டபத்தில் கன்னி மூல பஞ்சமுக ஹேரம்ப கணபதி தெற்கு திசை பார்த்ததும், தட்சிணா மூர்த்தி தெற்கு திசை பார்த்தும், 8 அடி உயர சனீஸ்வரர் மேற்கு திசை பார்த்தும் அவருக்கு எதிர்புறம் பஞ்சமுக ஆஞ்சநேயர் கிழக்கு திசை பார்த்தும், வடக்கு திசை பார்த்து வன துர்க்கையும் அமைத்து உள்ளனர். இந்த சபா மண்டபத்தின் அமைப்பு இந்தியாவில் வேறு எந்த கோவில்களிலும் காண முடியாத ஒரு அம்சம் ஆகும். காரணம் மண்டபத்தின் 4 மூலைகளிலும் சுவாமிகள் அமைத்து உள்ளனர். ராஜகணபதி கிழக்கு நோக்கியும், சபா மண்டபத்தில் கன்னி மூல பஞ்சமுக ஹேரம்ப கணபதி தெற்கு நோக்கியும், சுயம்பிரகாச கணபதி வடக்கு நோக்கியும் அமையப்பெற்று காட்சி அளிக்கின்றனர்.

இதே போல மலையின் 4 புறமும் சுயம்பிரகாச சரஸ்வத் அவதூதசுவாமிகளின் சிஷ்யர்கள் துரியானந்தர்,சங்கரானந்தர், கிருஷ்ணானந்தர்,சுகாநந்தர்ஆகியோரின் ஜீவசமாதிகள் உள்ளன. அதுவும் இந்த கோவிலின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாகும்.

கோவிலின் நுழைவாயிலின் இடதுபக்கமாக முருகனின் காவல் தெய்வமான இடும்பன் சுவாமிகளும், அதற்கு இடதுபுறமாக கீழ்புறத்தில் கங்காதேவி கோவிலும் (தத்தகங்கை) அமைந்து உள்ளன.

நுழை வாயிலின் வலது பக்கமாக சென்றால் சுயம்பிரகாச சுவாமிகள் வாழ்ந்த வீடு தற்போது அன்னதான மண்டபமாக மாற்றப்பட்டு காட்சி அளிப்பதை காணலாம்.இத்தனை சிறப்பு மிக்க தத்தாத்ரேயரை வழிபட்டால், கண் திருஷ்டி விலகும்,புத்திர பாக்கியம் கிடைக்கும். தொழில் அபிவிருத்தியாகும். குறிப்பாக திருட்டு போன பொருட்கள் மீண்டும் கிடைக்கும்.

தத்தாத்ரேயரை வழிப்பட்டவர்களில் காசிதேசத்தை

ஆண்ட மன்னர்கள் கார்காத்த வீரியார்க்கணனும், யதுசக்கரவர்த்தி மகராஜாவும் முக்கியமானவர்கள் ஆகும். அவர்களது சிலைகள் மூலஸ்தானத்திற்கும் பின்பகுதியில் தத்தாத்ரேயரை வழிபட்டதால் அவர்கள் தொடர்ந்து மன்னராக சிறப்பாக ஆட்சி புரிந்தனர் என செவி வழி செய்திகள் உள்ளன.

தத்தாத்ரேயர் அமைந்துள்ள தத்தகிரி மலை ஏறத்தாழ 5 ஏக்கருக்கும் அதிகமான பரப்பளவை கொண்டதாகும். அவருடன் தெற்கு நோக்கி முருகனும் இடம் பெற்று உள்ளதால் இது தத்தகிரி முருகன் கோவில் என்றே அழைக்கப்படுகிறது. இதன் ஸ்தல விருச்சம் அத்தி மரம் ஆகும். கோவிலை சுற்றி பிரதோஷ நாட்களில் கிரிவலம் வரும் நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

இங்கு கார்த்திகை மாதம் பவுர்ணமி திதியில் தத்தாத்ரேயர் ஜெயந்தி விழாவும், சித்தரை வருடப்பிறப்பு, பங்குனி உத்திரம், தைப்பூசம், சனிப்பெயர்ச்சி மற்றும் குருப்பெயர்ச்சி விழாக்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன. தைப்பூசம், பங்குனி உத்திரத்தின் போது தேரோட்டமும் நடத்தப்படுகிறது. மார்கழி மாதம் அனுமன் ஜெயந்திக்கு முதல் நாள் சுயம் பிரகாச சரஸ்வதி அவதூத சுவாமிகள் ஜீவசமாதி அடைந்த ஆராதனை விழா குருபூஜை விழாவாக கொண்டாடப்படுகிறது.

தற்போது தத்தகிரி முருகன் கோவிலில் தினமும் காலை $7^{1/2}$ மணி முதல் இரவு $7^{1/2}$ மணி வரை கோவில் திறந்து வைக்கப்பட்டு பூஜைகள் நடத்தப்படுகின்றன.

தினமும் காலை 11 மணிக்கு உச்சிகால பூஜை மாலை 6 மணிக்கு சாயரட்ச பூஜை என இரு கால பூஜைகள் நடத்தப்படுகின்றன.இந்த தத்தகிரி முருகன் கோவில் ஏறத்தாழ 100 அடி உயரத்தில் 86 படிக்கட்டுகளுடன் அமைந்து உள்ளது.

நாமக்கல்லில் இருந்து சரியாக 11 கிலே மீட்டர் தொலைவில் உள்ளது. குழந்தை இல்லாத தம்பதிகள் தத்தகிரி முருகன் கோவிலுக்கு வந்து தத்தாத்ரேயரையும் முருகனையும் வழிப்பட்டு தொட்டில் கட்டி சென்றால் குழந்தை பாக்கியம் கிடைக்கும் என்பது ஐதீகம்.

# சேலம் (கந்தாஸ்ரமம்) முருகன் கோவில்

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருந்தாலும் இந்த குன்றில் இருக்கும் குமரனுக்கு மட்டும் எந்த கோயிலிலும் இல்லாத சிறப்பு உண்டு. தாயும் சேயுமாக எதிரெதிரில் பராசக்தி துர்கா பரமேஸ்வரியும், கந்தனும் அமைந்திருப்பது சேலம் கந்தாஸ்ரமத்தில் மட்டுமே.

சேலம் - ஆத்தூர் ரோட்டில் உடையாப்பட்டி கிராமத்தில் இருந்து இரண்டு கி,மீ., தொலைவில் பச்சை பசேலென்ற குன்றுகளுக்கு மத்தியில் ஒரு சிறு குன்றின் மீது இயற்கை எழில் சூழ அமைதி தவழ கம்பீரமாய் வீற்றிருக்கிறது கந்தாஸ்ரமம்.

புதுக்கோட்டையில் பரம குருநாதர் ஜட்ஜ் சுவாமி சன்னிதானத்தில் உறங்கி கொண்டிருந்த சத்குரு சாந்தானந்த சுவாமியின் கனவில் தோன்றிய முருகன், ‘உனது குருநாதர் ஸ்வயம் பிரகாசர் சித்தி அடைந்த ஊரில் நாலைந்து மலைகளுக்கு இடையே ஒரு ஓடை ஓரம் நான் இருக்கிறேன். வா’ என்று கூறி விட்டு மறைந்தார்.

குழம்பிபோன சாந்தானந்த சுவாமி , முருகன் குறிப்பிட்ட இடத்தை தேடி அலைந்தார்.

இரண்டு ஆண்டுகள் பல இன்னல்களை தாண்டி, கடும் தேடலுக்கு பிறகு 67 ல் சேலம் உடையாப்பட்டிக்கு அருகில் கன்னிமார் ஓடைக்கு அருகில் இருந்த இவ்விடத்தை கண்டுபிடித்தனர். இங்கு ஜோதி வடிவமாய் சுவாமிகளுக்கு காட்சி அளித்த முருகன் மறுநாள் அவரது கனவில் தோன்றி அந்த இடத்தில் தனக்கு கல் விக்கிரகம் செய்து வைக்குமாறு கூறினார்.

விக்கிரகம் செய்யும் யோசனையில் சுவாமிகள் சொந்த ஊரான புதுக்கோட்டைக்கு திரும்பி சென்றார். அங்கு சொல்லி வைத்தாற்போல ஓட்டல் முதலாளி ஒருவர் பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட சிறு விக்ரகத்தை கொண்டு வந்து சாந்தானந்தா

சுவாமிகளிடம் கொடுத்தார். அதை போலவே கல்லால் ஆன விக்ரகம் உருவாக்கப்பட்டது.

1969 ம் ஆண்டு இங்கு வேத பாடசாலை துவங்கப்பட்டது. கடைசியில் 1970 ல் ஸ்ரீ ஞானஸ்கந்த குருநாதன் சிலை சன்னிதானம் வந்தடைந்தது. சன்னிதானத்தில் ஸ்கந்த குருநாதருக்கு சக்திவேல் கொடுத்த பராசக்தியான ஸ்ரீ அஷ்டதசபுஜ மஹாலட்சுமியான துர்கா பரமேஸ்வரியை ஐம்பொன்னால் சிலையாக வடித்து தாயும் சேயுமாக எதிரெதிரே வடித்த விக்கிரகங்கள் அமைக்கப்பட்டது.

இப்படி உருவான ஆஸ்ரமமே இன்று சேலத்தில் கந்தாஸ்ரமமாக பிரசித்தி பெற்று விளங்குகிறது. மலைப்பாதை ஏறும் முன் ஆலமரத்தடியில் விநாயகர் தரிசனம் தருகிறார். சன்னதியினுள் பராசக்திக்கு இருபுறமும் ருக், யஜுர், சாம, அதர்வன என நான்கு வேத மூர்த்திகளும், ஆதிசங்கரரும் அருள்பாலிக்கின்றனர். வலப்புறம் சாந்தானந்தா சுவாமிகளின் குருநாதர் ஜட்ஜ் சுவாமிகள், இடதுபுறம் ஜட்ஜ் சுவாமிகளின் குருநாதர் அவதூத சுவாமிகள் சிலையும் உள்ளன.

எதிரே தனி சன்னதியில் கந்த பெருமாளும், அவருக்கு இருபுறமும் சந்திர, சூரிய மூர்த்திகள் காட்சி அளிக்கின்றனர். சன்னதியின் வெளியே தோட்ட வளாகத்தில் 16 அடியில் பஞ்சமுக கணபதி, 16 அடியில் பஞ்சமுக அனுமான் அருள் பாலிக்கிறார். அவருக்கு வலதுபுறம் நாரதரும், இடதுபுறம் ராகவேந்திரர்; எதிரில் 16 அடி பஞ்சமுக கணபதி, அருகில் தத்தாத்ரேய பகவான் ஆகியோர் அருள் பாலிக்கின்றனர்.

சன்னதியில் முருகனும், பராசக்தியும், நடமாடும் தெய்வங்களாக வீற்றிருக்கின்றனர்.

# காளிப்பட்டி கந்தசாமி

**பி**ணியுற்று உழல்வோர் நெஞ்சில் நிம்மதியைத் தரும் இடம்தான் ஆலயங்கள் அந்த ஆலயங்களில் நிகழும் அற்புதங்கள், வளர்ந்து வரும் விஞ்ஞான உலகுக்கே பெரும் சவாலாக இருந்து வருகிறது. இத்தகைய புகழ்மிக்க ஆலயங்களில் ஒன்று தான் காளிப்பட்டி அருள்மிகு கந்தசாமி திருக்கோவில்.

சேலத்திலிருந்து சுமார்23 கிலோ மீட்டர் தொலைவில் சேலம் திருச்செங்கோடு இடையில் காளிப்பட்டி உள்ளது. பஸ் நிறுத்துமிடத்தில் இருந்து நேர்எதிரில் கோபுரத்துடன் சீர்மிகு சிற்பவேலைபாடுகளுடன் எழில்சூழ இந்த ஆலயம் அமைந்து உள்ளது. இதன் வரலாற்றை இங்கு காணலாம்.

இக்கோவில் பூசாரி தன் சிறு குடிசையில் காவடியை வைத்து தினமும் புஜித்து வந்தார். வருடந்தோரும் தைப்பூச தினத்தில் பழனிக்கு பாதயாத்திரையாக காவடி சுமந்து சென்று சரவண பொய்கையி ல் நீராடி, பெருமானை வணங்கி வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

அவ்வாறு ஒரு சமயம் அவர் முருகனை வணங்கிட்டு நடந்த களைப்புதீர ஓய்வாக படுத்து உறங்கிய போது, கந்தன் அவர் கனவில் தோன்றி, இனிமேல் நீ சிரமத்துடன் இங்கு நடந்து வர வேண்டாம். நானே நீ இருக்கும் இடத்திற்கு (காளிப்பட்டி) வந்துவிடுகிறேன் என்று அருள் வாக்கு கூறும் சக்தியையும் வழங்கினான்.

கோவிலுக்கு ஒரு பர்லாங்கு தொலைவில் ஒரு கிழவியின் தோட்டத்தில் அழகிய பசுமாடு ஒன்று கன்றினை ஈன்றும் பால் இல்லாமல் வறண்டு இருந்தது. தோட்டக்காரர் இது பற்றி பூஜாரியிடம் முறையிட்டார் . அவர் பக்தர்கள் புடைசூழ மேளதாளத்துடன் அங்கு சென்று பசுவின் மடியில் விபுதியைத் தடவி ஒரு குடத்தை வைத்து பால் கறக்க முற்பட்டார்.

கறக்க கறக்க குடம் குடமாக பால் வந்து கொண்டே இருந்தது. அந்த பால் முழுவதையும் கந்தனுக்கு அபிசேகம்

செய்தனர். அது முதல் இக்கோவிலில் பால் அபிசேகம் செய்வது சிறப்பானதாகக் கருதப்படுகிறது.



முதன்முதலில் பூஜாரி காவடி வைக்கப்பட்டு இருவேளை பூஜை நடக்கிறது. ஆண்டில் ஒரு நாள் மட்டும் காவடியை 2 கல் தூரம் உள்ள திருமணிமுத்தாற்றிற்கு மேளதாளத்துடன் எடுத்து சென்ற காவடி கலசத்தில் தீர்த்தமே எடுத்து வந்து, பங்குனி உத்திரத்தன்று மூலவருக்கு அபிசேகம் செய்கிறார்கள். மூலஸ்தானத்திற்கு நேர் எதிராக ஸ்தாபகரின் சமாதி உள்ளது.

கோவில் நிர்வாகத்தினர் தலைமுறை தலைமுறையாக கோவிலை நிர்வாகித்து வருகிறார்கள். தைப்பூசத்திருவிழா, சூரசம்ஹார திருவிழா (கந்தசஷ்டி), பங்குனி உத்திர திருவிழா, விநாயகர் சதுர்த்தி,ஆயுதபூஜை, பிரதி அமாவாசை, சஷ்டி, கிருத்திகை உள்ளிட்ட விழாக்கள் இக்கோவிலில் பிரசித்த பெற்றது.

# குமரகிரி முருகன் கோவில்

திருடியும் இறைபணி செய்தவர் திருமங்கையாழ்வார். பிச்சை எடுத்தே இறைபணி செய்த கதையும் உண்டு. இப்படியாக இறைபணிகள் எல்லா காலத்திலும் எதாவது ஒருவகையில் வளர்ந்து கொண்டே இருந்திருக்கிறது. இப்போது நாம் காணும் கோவில் பிச்சை எடுத்தே கட்டப்பட்ட முருகன் கோவிலாகும்.

தனி மனிதர் ஒருவரின் உழைப்பினால் கட்டப்பட்டதே இன்று வானுயர்ந்து கம்பீரமாய் நிற்கும் குமரகிரி தண்டாயுதபாணி சுவாமி கோவில். ஆறுபடை வீடுகளுக்கு போக முடியவில்லையே என்ற கவலையை இக்கோவில் போக்குகிறது. இங்குள்ள முருகனை தரிசித்தால் ஆறுபடை வீட்டை தரிசித்த பாக்கியம் கிட்டும்.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு சேலம் அம்மாபேட்டையை சேர்ந்த கருப்பண்ண சுவாமி என்ற முருக பக்தர் குன்றின் மேல் உள்ள ஒரு குகையில் அமர்ந்து தியானம் செய்து வந்தார். ஒருமுறை அசரீரி ஒலித்தது. 'இக்குன்றின் உச்சியில் ஒரு இடத்தில் வெள்ளை அரளி, செவ்வரளி பூக்கள் நிறைய பூத்திருக்கும். அங்கு எனக்கு சன்னதி எழுப்பு என்ற குரல் கேட்டது.

அதை சொன்னவர் முருகன் என உணர்ந்த கருப்பண்ண சுவாமி கோவில் எழுப்புவதற்கான வேலைகளில் ஈடுபட்டார். கருப்பண்ண சுவாமி பெரிய செல்வந்தர் அல்ல முருகனை போலவே ஆண்டி, ஆண்டியிடம் அன்பை தவிர என்ன இருக்கும்? இருந்தும் தனது வறுமையையும் பொருட்படுத்தாமல் வீடு, வீடாக பிச்சை எடுத்து அதில் கிடைக்கும் கேழ்வரகு ,கம்பு போன்ற தானியங்களின் மாவை வாங்கி அதை இக்குன்றின் அடிவாரத்தில் மாடு மேற்கும் சிறுவர்களிடம் அளித்தார். அதை கூலியாக பெற்றுக் கொண்ட அவர்கள் ஒவ்வொரு செங்கல்லாக குன்றின் மீது தூக்கி சென்றனர். சில மாதங்களில் சிறிது, சிறிதாக கோவில் எழும்ப தொடங்கியது. இவரது முயற்சியை பார்த்து வியந்து ஊர்மக்கள் பின்னர் ஒன்று சேர்ந்து கோவிலை கட்டி முடித்தனர்.

சேலம் பழைய பஸ் ஸ்டாண்டில் இருந்து இரண்டு கி.மீ., தொலைவில் அம்மாபேட்டை மெயின் ரோட்டில் பிரமாண்டமான கோவிலின் நுழைவு வாசல் வரவேற்கிறது. உள்ளே ஊரைதாண்டி சென்றால் வலதுபுறம் பச்சை பசேலேன்ற வயல்வெளியும், இடதுபுறம் அகண்டு விரிந்த ஏரியும்,கூடவே விதவிதமான பறவைகளும், அதன் கீச்கீச்களும், படகுத்தோணியும், நச்சு புகை கலக்காத இயற்கை அன்னையின் மூச்சுக் காற்றும், பெரும் சுகமளிக்கிறது.

இதை எல்லாம் பிரிய மனமே இல்லாமல் தாண்டி சென்றால் பச்சை பசேலேன்ற மரங்கள் சூழ குமரகிரி குன்றின் மீது தண்டாயுதபாணி சுவாமி கோவில் வானுயர்ந்து கம்பீரமாக நிற்கிறது. கீழே முதலில் நம்மை வரவேற்பது அரசமரத்தடி விநாயகர், பக்கத்தில் அவருக்கு பேச்சுத்துணையாக இன்ப விநாயகர். இவர்களுக்கு அருகில் கோவிலை நிர்மானித்த கருப்பண்ண சுவாமிகள் தனது மனைவி வள்ளியும்மையுடன் தனி சன்னதியில் காட்சி தருகிறார். சில படிகள் ஏறினால் சக்திவேல் ஆலயம். எதிரே முருகனின் நண்பரான இடும்பன் சன்னதி.

படிக்கட்டுக்கள் நம்மை கோவிலுக்கு அழைத்து செல்கின்றன. மொத்தம் 650 படிகள். பக்தி சிரத்தையுடன் ஏறினால் 15 நிமிடத்தில் ஏறிவிடலாம். குன்றின் உச்சியில் அழகான தோற்றத்தில் முருகன் சன்னதி, உள்ளே வலம்புரி விநாயகர், ஐயப்பன், பஞ்சமுக விநாயகர். அகத்தியர், அருணகிரி நாதர், துர்க்கை, ஆஞ்சநேயர் ஆகியோர் தனித்தனி சன்னதிகளில் காட்சி அளிக்கின்றனர். மூலவர் முருகன் வடக்கு நோக்கி இடது காலை சிறிது மடங்கி, வலது காலை நன்கு ஊன்றி வலது கையில் சக்திவேல் ஏந்தி அருள்பாலித்த படி காட்சி அளிக்கிறார்.

இங்கு ஒவ்வொரு ஞாயிறும் மாலை 4 மணி முதல் ஆறு மணி வரை ராகுகால பூஜை நடக்கிறது. இதில் கலந்து கொண்டால் ராகு தோஷத்தில் இருந்து விடுபடலாம். இது தவிர பிரதி மாதம் பவுர்ணமி சிறப்பு பூஜை, கிருத்திகையில் மாலை 6

முதல் 7 மணி வரை விசேஷ பூஜைகள், ஆடி கிருத்திகையில் 1008 லிட்டர் பால் அபிஷேகம்,அமாவாசையில்சிறப்பு பூஜை, அன்னதானம் நடைபெறுகிறது.

தற்போது மலைக்கு பின்புறமாக மேலே கோவிலுக்கு பஸ்சில் செல்ல ரோடு போடப்பட்டுள்ளது.

# கஞ்சமலை சித்தர் கோவில்

சேலத்திற்கு மேற்கே சுமார் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது கஞ்சமலை சித்தர் கோவில். கஞ்சமலை பெயர் விளக்கம். 'கஞ்சம்' என்பதற்கு முதல் பொருள்'பொன்' என்பதாகும். பராந்தக சோழன் இங்கு கிடைத்த பொன்னைக் கொண்டு தில்லை நடராஜர் ஆலயத்திற்கு பொன்வேய்ந்து அதனை பொன்னம்பலம் ஆக்கினான் என்பர்.

'கஞ்சம்' என்ற சொல்லுக்கு இன்னொரு பொருள்'இரும்பு' என்பதாகும். இங்குள்ள மலைப்பகுதியில் இரும்புத்தாது மிகுந்துள்ளது. மாவீரன் அலெக்சாண்டருக்கு போரஸ் (புருஷோத்தமன்) மன்னன் பரிசளித்த வாள் இக்கஞ்சமலை இருப்பினால் செய்யப்பட்டதாக வரலாற்று செய்தியும் உண்டு.

'கஞ்சம்' என்பதற்கு 'தாமரை' என்ற பொருளும் உண்டு. கஞ்சன் என்பது பிரம்மனின் பெயர்களுள் ஒன்று. தாமரைக்கருவினில் உதித்ததால் பிரம்மனின் பெயர்களுள் ஒன்றானது. கஞ்சனால் (பிரம்மனால்) படைக்கப்பட்ட மலை 'கஞ்சமலை' என்றாயிற்று.

முன்னோரு காலத்தில் கோரக்கர், கருவூர்ச்சித்தர், கொங்கணர், அலவாய்மலைசித்தர், நவநாவர், அகப்பைச்சித்தர், பாம்பாட்டிச் சித்தர், ஆகிய சித்தர்கள் கற்ப மூலிகையை எங்கு தேடியும் கிடைக்கவில்லை. கஞ்சன் என்ற பெயர் பெற்ற பிரம்ம தேவனை நோக்கித் தவம் செய்தனர். அவர்களுக்கு காட்சியளித்த பிரம்மன் பல்வேறு விதமான மூலிகைகளும் நிறைந்திருக்கும் மலையை சிருஷ்டித்துக் கொடுத்தார்.

இம்மலையில் கருநெல்லி,வெள்ளை சாரணச் செடி,நிழல் சாயா மரங்கள் கூடுவிட்டு கூடு பாயும் மருந்துச் செடிகள் இறந்த உடலை உயிர்ப்பிக்கும் அமுத சஞ்சீவி போன்ற மூலிகைகளை படைத்து கொடுத்தார் என்கிறது கரபுநாதர் புராணம்.

இத்திருக்கோவிலில் அருள்பாலித்து வரும் இறைவன் அருள்மிகு சித்தேஸ்வர சுவாமி ஆவார். மூலவர் கஞ்சமலை

சித்தர் காலங்கிநாதர்(சித்தேஸ்வரர்) ஒரு இளம் யோகியின் உருவம் சின்முத்திரையுடன் தவக் கோலத்தில் பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகிறார்.

இத்திருத்தலத்தில் இறைவன் கலிங்கதேசத்தில் வேதமங்கலம் என்னும் ஊரில் வசித்தவர் என்றும் சுந்தரர் என்னும் திருப்பெயர் கொண்டவர் என்றும் சிவன் மீது பற்று கொண்டு வழிப்பட்டதன் விளைவாய் ஈசன் காட்சி தந்து வேண்டுவன கேள் எனக்கூற, 'ஐயனே இம்மையில் காய சித்தியடைந்து இறவாதிருக்க வரம் அருள்க' என வேண்டினார். ஈசனும் சீலமிக்க நீ முத்தியடைந்து சாகாவரம் பெற்று கலியுகத்தில் யாவரும் அறியாதபடி அருபியாய் (உருவம் இல்லாமல்) இருந்து எம்மைப் பூஜிப்பாய் என்றும் 'கஞ்சமலைச் சித்தர்' எனும் பேர் உனக்கு நிலைக்கும் என்றும் நின்னை பூஜிப்பவர் என்னை பூஜித்தவர் என்றும் ஈசன் அருளிச் செய்தார். என்று கரபுரநாதர் புராணம் கூறுகிறது.

'மெய்ஞான விழிப்பு' என்றும் நூலில் சித்தேசரராகிய காலங்கிநாதர் தான் பறக்கும் தன்மை பெற்ற சித்து நிலையில் சரீரத்தை இரும்பு தாதுவாக்கி காந்தநீர் சுழற்சியில் உள்ளிட்டு ஓட்ட சதியில் அம்மின் காந்த சக்தியினை உயரிய ஒலி மின்காந்த சக்தியாக்கி, சாரீரநிலைக்கு கொண்டுதன் உயிர் ஆத்மாவையே மண்டலமாகச் சுழலச்செய்து இன்றும் வளர்ந்து வருகிறார். என்று கூறப்பட்டுள்ளது. இக்கோவிலுக்கு மேற்கே 'காந்த நீர்' குளம் ஒன்று உள்ளது.

மூலன் என்ற சித்தரும் அவனது சீடரும் மூலிகைகளைத் தேடி கஞ்சமலை வந்தனர். பசி ஏற்பட, சீடன் உணவு சமைத்தான். சோறு பொங்கியது. அதனை துழாவுவதற்கு அருகே கிடந்த குச்சி ஒன்றை எடுத்து சோற்றை கிளறினார். சோறு கறுத்தது குருவுக்கு அஞ்சி கருத்த சோற்றை தானே உண்டான். பின் அவனது முதிர்ந்த உடல் இளமையானது. மீண்டும் திரும்பி வந்த மூலன் தன் சீடனை காணாது திகைத்தான். இளமையாயிருந்த சீடன் நடந்தவற்றைக்

கூற எந்த மூலிகையைத் தேடி அலைந்தோமோ அது இங்கேயே இருக்கிறதே! எங்கே அந்த குச்சி கேட்க அதை அடுப்பில் போட்டுவிட்டேன் என்றான் சீடன். குரு வேறு வழியின்றி சீடன் சாப்பிட்ட கருத்த உணவை வாந்தி எடுக்க வைத்து அதை தானும் சாப்பிட்டு இளமை தோற்றத்தை அடைந்தார் குருவும், சீடனும் மூலிகை உணவு சாப்பிட்டு இளமையான ஊர் இன்றும் இளம்பிள்ளை என்று வழங்கப்படுகிறது.

சிறப்புப் பெற்ற சித்தர்கள் 18 பேர். இவர்களுள் முதல் சித்தராக நந்தி பெருமானைக் குறிப்பிடுகின்றனர். இவர் சிவனுக்கு வாகனமானவர்.

நந்தி தேவரின் அருள் பெற்றவர்கள் பிரம்ப தேவர் குமாரர்களாக சனகர், சனாதனர், சனநீதனர், சனத்குமாரர் என்னும் நால்வருடன் சிவமுனிவர், பதஞ்சலி முனிவர், வியாக்ரபாதமுனிவர் எனும் மூவரும் சேர்ந்து 7 பேர் திருமூலருடன் சேர்ந்து எட்டுபேர்.

திருமூலரிடமிருந்து மந்திர உபதேசம் பெற்றவர்கள் மாலங்கன், இந்திரன், சோமன், பிரம்மன் உத்திரன் கந்துரு காலங்கி கஞ்சமலையான் என்ற 7 பேர் ஆவர்.

**சித்தேஸ்வரர் கோயில் சிறப்புகள்**

இக்கோயிலுக்கு அருகே எந்நாளும் வற்றாத ஜீவநதி ஒன்று ஓடிக் கொண்டேயுள்ளது. அங்கேயே சிற்சில கிணறுகள் உள்ளன. இந்த மூலிகை மற்றும் இரும்பு சத்து நீரின் மூலம் உடம்பிலுள்ள வியாதிகள் குணமடைகிறது. இங்குள்ள காந்த நீர் குளத்தில் எவ்வளவு உப்பைப் போட்டாலும் குளத்திலுள்ள நீர் கரிப்பதில்லை. இந்த நீரைத்தான் சித்தேஸ்வர ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்கிறார்கள்.

திருநெல்வேலி சைவசித்தாந்த நூலகத்தார் வெளியிட்டுள்ள திருமூலநாயனார் அருளிச் செய்த திருமந்திரத்தில் காலங்கி நாதர் கஞ்சமலை என்னுமிடத்தில் திருமூலர் மரபில் ஓர் மடம் கட்டுவித்து தம் மாணாக்கர்களுக்கு

போதித்து வந்தார். என்பது அதுவே தற்போது சித்தர்கோவில் என்றும் வழங்கப்படுகிறது. தகடூரை தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த அதியமான் கஞ்சமலைச் சித்தரிடம் நெல்லிக்கனி பெற்று ஔவையாருக்கு கொடுத்தது புறநானூற்றிலும் பத்து பாட்டிலும் தெரிகிறது.

கஞ்சமலைக்கு சஞ்சீவி மலை என்ற பெயரும் வழங்கப்படுகிறது உடலை விட்டகன்ற உயிரை மீட்கும் சஞ்சீவகரணி எனும் மூலிகை இம்மலையில் இருந்ததால் இம்மலைக்கு சஞ்சீவி மலை என்று பெயர் விளங்கியது.



இந்தக் கோவிலின் கட்டிடக்கலை சோழர் கால கட்டிடக்கலை நுணுக்கங்கள் கொண்டுள்ளது. 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த தாரமங்கலம் திருக்கோவில் திருப்பணியைச் செய்த கெட்டி முதலியின் கை வண்ணமும் திருக்கோவிலில் தென்படுகிறது. கருவறைக் கட்டிடத்தில் அமைந்துள்ள கற்கள் 1300 ஆண்டுகளுக்கு மேற்பட்டவை தொல்லியல் ஆராய்ச்சியினர் கூறுகின்றனர்.

இக்கோவிலில் விஜயநகர பேரரசர் காலத்து கல்வெட்டு ஒன்று மிகச் சிதைந்த நிலையில் உள்ளது. சித்தேஸ்வரர் கோவிலுக்கு வடமேற்கில் சிறிய குன்றின் மீது பாலமுருகன் கோவிலும், நுழைவாயிலின் இருபுறமும் துவார பாலகர்களும் காட்சி தருகிறனர். வலபக்கத்தில் விநாயகர் காட்சி தருகிறார். வெளிமண்டபத்தை அடுத்து கொடிமரம் பலிபீடம் அமைந்துள்ளது.

பிரகாரத்தில் அய்யப்பன், மகாவிஷ்ணு, பிரம்மா, நாரதர் ஆகியோர் காட்சியளிக்கின்றனர். வடக்கு பிரகாரத்தில் நவக்கிரக மூர்த்திகள், சண்டேசுவரர் ஆகியோரும் தெற்கு பிரகாரத்தில் தட்சிணாமூர்த்தியும் உள்ளனர்.

சித்தேஸ்வரன் கோவிலுக்கு தென்புறம் காளியம்மன் சன்னதி உள்ளது.

கஞ்சமலை சித்தேஸ்வரன் திருக்கோவில் மூர்த்தி தலம் தீர்த்தம் எனும் மூன்றாலும் சிறப்புற்று விளங்கும். இவ்விடம் சுற்றுலா தலமாகவும் விளங்கி வருகின்றது. பொது மக்கள் பெருமளவில் இங்கு வந்து இயற்கைச் சுழலில் இளைப்பாறி இத்தலத்து இறைவனை வழிப்பட்டுச் செல்கின்றனர். இதனால் இத்திருக்கோவில் அனைத்து மக்களையும் தன்பால் ஈர்க்கும் தன்மை கொண்டதாக விளங்குகிறது.

# ஸ்ரீ ராமர் பாதம் அயோத்தியாப் பட்டணம்

சேலத்தின் கிழக்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ளது. அயோத்தியாப்பட்டணம் இராமர் கோவில். ராமன் இலங்கை வேந்தன் ராவணனை வதம் செய்த பிறகு தனது மனைவியை மீட்டுக் கொண்டு அயோத்தி திரும்பச் சென்றான். வழியில் அயோத்தியாப்பட்டணம் அமைந்துள்ள பகுதியில் ஒருநாள் தங்கிச் சென்றான். இதனால் ராமர் பாதம்பட்ட இடம் அயோத்தியாப்பட்டணம் எனப்பெயர் பெற்றது. இதனால் இங்கு கோதண்டராமனை மூலவராகக் கொண்டராமனுக்கு பெரிய கோவில் எழுந்துள்ளது.

திருமணி முத்தாற்றின் கிழக்குக் கரையில் இந்தக் கோவில் அமைந்துள்ளது. மூர்த்தியின் பெயர் ஸ்ரீ கோதண்ட ராமசாமி என்பதாகும். மேலும் ராமர் இங்கு வந்துள்ளமைக்கு சேலம் அருகே (மல்லூர்) பொய்மான் கரடும், ஓமலூர் நெடுஞ்சாலையில் ஒரு கற்பாறை மீது ராமர் பாதமும், அரூர் வட்டம் தீர்த்தமலை அருகேயுள்ள தென்பெண்ணை ஆற்றிலுள்ள அனுமன் தீர்த்தமும் நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளாகும்.

வைணவக் கோவிலான இது திருமலை நாய்க்கர்கள் காலத்தில் கட்டப்பட்டதாகக் கருதுகிறார்கள். கோவிலின் முன் மண்டபம், கோபுரம் ஆகியவையும் நாய்க்கர்கள் காலத்து வண்ண ஓவியங்களையும் காணமுடிகிறது. சேலம் மாசிநாயக்கன் கோவிலை செப்பனிட்டதாகவும் கருதுவர்.

தாரமங்கலம் சிவன் கோவில், தாடிக் கொம்புபொருள் கோவில் ஆகியவை இக்கோவில் அமைப்பில் கட்டப்பட்டவையாகும்.

இந்தக்கோவிலில் ஸ்ரீராமர் பட்டாபிஷேக காட்சியிலிருப்பது குறிப்பிடத்தக்கது. சிதை பத்மாசன கோலத்தில் வலதுகையில் ஆசிர்வாதம் வழங்குவது கோலவும் மற்றொரு கையில் தாமரை பூவை பிடித்த படியும் இருக்கிறாள். லட்சுமணன் உடைவாள் ஏந்திய நிலையிலும் பரதன் வெண்குடை

பிடித்த பிடியும் சத்ருக்கணன் வெண்சாமரன் வீசுவது போலவும், அங்கதன் சுக்ரீவன் நின்று கொண்டிருக்கும் நிலையிலும் சிற்பங்கள் உள்ளன.

கோவிலைச் சுற்றிலும் உயர் மதிலும், நந்தவனமும் உள்ளது. ராஜ கோபுரமும், பலிபீடமும் உள்ளது. கோவிலில் அழகிய சிற்பங்கள் உண்டு. விமானத்தில் கல்லினால் சங்கிலிகள் அமைந்துத் தொங்கும் வகையில் தொடராய் அமைந்திருப்பது சிறப்பு. மகா விஷ்ணுவின் தசாவதார காட்சியை சித்தரிக்கும் தூணும் உள்ளது. மேலும் 4 தூண்கள் அதிசிய வேலைப்பாடு கொண்டவை. ஒரு தூணை தட்டினால் பல வித ஒலிகளை எழுப்பும். இது சங்கீதத் தூண் ஆகும். மற்றொரு தூணில் ராமர், லட்சுமணன், சீதை உள்ளனர். அதற்கு எதிர்ப்புறம் திருமலை நாயக்கர் தனது தேவியருடன் உள்ளார். மற்றொரு தூணில் ஆஞ்சநேயர்.

ராமர் கோவிலிலிருந்து 200 அடி தூரத்தில் ஆஞ்ச்நேயர் சன்னதி உள்ளது. ஆஞ்சநேயர் ராமரை வணங்கியபடி நிற்கிறார். பின்புறம் கல்வெட்டுத்தூண் 7 அடி உயரத்தில் சாய்ந்த நிலையில் உள்ளது. சித்திரை மாதம் ராமநவமி திருவிழா சிறப்பாக நடத்துவார்கள்.

அயோத்தியாபட்டணம் ராமர் கோவிலிலுள்ள நந்தவனத்தில் ஆஞ்சநேயர் சன்னதி உள்ளது. இதன் கிழக்குப் பகுதியிலுள்ள துவாரம் வழியாக வருடத்தில் ஒரு நாள் மட்டும் சூரியஒளி ராமர் சிலை மீது விழும். சித்திரை பவுர்ணமி அன்று மட்டும் இக்காட்சியை அனைவரும் ரசிக்கலாம்.

சூரிய பகவான் வருடத்தில் ஒருநாள் சூரியவம்ச மன்னரான ராமனின் பொற்பாதங்களைத் தொட்டு வணங்குவதாகக் கூறுவர். ஆனால் இது இப்போது நிகழ்வதில்லை. காரணம் சன்னதிக்கருகே உயர்ந்த கட்டிடங்கள் கட்டப்பட்டு உள்ளதால் சூரிய ஒளி கோவிலுக்குள் ஊடுருவிச் செல்லவிடாமல் மறைக்கப்பட்டது கொடுமை.

# மோகனூர் அசலதீபேஸ்வரர் ஆலயம்

நாமக்கல் நகரிலிருந்து தெற்கில் 18 கி.மீ. தொலைவிலும், பரமத்தி வேலூரிலிருந்து கிழக்கில் 17 கி.மீ. தொலைவிலும், காட்டுப்புத்தூரிலிருந்து 11 கி.மீ தொலைவிலும் உள்ள மோகனூரில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

மோகனூர் என்கிற இந்த ஊர் பழங்காலந்தொட்டே பெருமை பெற்ற ஊராகும். 'மோகூர் என்னும் பெயரிலும் வில்வகிரி' சேத்திரம் என்ற பெயரிலும் விளங்கி வந்த ஊரே இப்போது மோகனூர் என வழங்கப்படுகிறது.

பெயர்க்காரணம்

ஒரு சமயம் தேவர்கள் சிவபெருமானைத் தரிசிக்க ஆவல் கொண்டு கைலாயம் சென்றனர். அங்கு சென்று பார்த்தபொழுது, சிவபெருமான் கங்கா தேவியை விட்டு விட்டு தனித்து தியானத்தில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தனர். இது கண்ட தேவர்கள் திகைத்து கங்காதேவியையும் வணங்கிட எண்ணம் கொண்டு தேடிப் பார்த்தனர்.

தேவியை எங்கும் காணாமல் வியந்த தேவர்களிடம் முருகப்பெருமாள் தோன்றினார். தேவர்கள் கங்காதேவியைக் குறித்து அவரிடம் வினவ, முருகப் பெருமான் தேவியைக் கண்டுபிடித்து அழைத்து வருவதாக கூறிப்புறப்பட்டார்.

இவ்வாறு கங்காதேவியைத் தேடிக்கொண்டே வந்த முருகன் மதுரையை அடைந்தார். அங்கு மதுரை மீனாட்சி, "மதுரையிலிருந்து வடக்கு நோக்கி பத்து யோசனை தூரத்தில் காவிரிக்கரையில் வில்வ மரங்கள் சூழ்ந்த பகுதியில் கங்காதேவி இருக்கிறார்" என பைந்தமிழ்க் குமரன் முருகனிடம் தெரிவித்தார்.

முருகப் பெருமானும் அவ்வாறே தேடியலைந்தும் கங்காதேவி காட்சி தரவில்லை எனவே வருத்தமுற்ற முருகன் கங்காதேவியை எண்ணி, கடுந்தவம் புரிந்தார். இதனால் முருகப் பெருமான் முன் கங்காதேவி தோன்றினார். அவரைக் கண்டதும்

பெற்ற மைந்தனைக் கண்ட தாயாய் தாய் அன்பு காரணமாக பால் கரந்து வழிந்து காவிரி ஆற்றில் கலந்தது முருகனின் வேண்டுகோளுங்கிணங்க சாந்தமும், அமைதியும் அடைந்த கங்காதேவி, "மகனே முருகா" நீ என்னை நினைத்து தவம்புரிந்த இந்த வில்வ மரங்கள் அடர்ந்த சிவனும், சக்தியும் தோன்றினர். "எனக்கு இருமனைவியர் என உலகம் எண்ணுகிறது. சக்தியின் அம்சங்களில் கங்கையும் உண்டு" என சிவன் மறைகிறார். சக்தி, கங்கை, சிவன் ஆகிய மூவரும் முருகனுக்கு காட்சிதந்த இடம் இந்த "வில்வகிரிசேசத்திரம்" என்னும் மோகனூர் ஆகும்.

அதே போல் திருவிளையாடற் புராணத்தில் உள்ள இன்னொரு செய்தியும் உண்டு. உலகைச் சுற்றி வலம் வந்த முருகன், தனக்கு கனி கிடைக்காத காரணத்தினால் சக்தியுடன் சிவனுடனும் கோபித்துக் கொண்டு பழனி செல்லும் வழியில் இந்த மோகனூரில் தங்கினார். சக்தி முதல் முதலாக இந்த ஊரில் தன் மகனைக் கண்டதால் 'மகனூர்' என வழங்கப்பட்டு பின் அது மருவி மோகனூர் என்றாயிற்று என்று கூறுவாரும் உளர்.

கங்காதேவி, முருகனைக் கண்டதும் தாயன்பு வெளிப்பட்டதால் பால் கரந்து காவிரியில் கலந்ததால் அத்தீர்த்தத்திற்கு குமரித்தீர்த்தம் என்றே பெயர் வந்தது. பழைய தமிழ் நூல்களில் காணப்படும் கொங்கு குமரி என்னும் இடமும் இதுவே எனலாம்.

'கங்கையாடி லென் காவிரியாடி வென்
கொங்குதன் குமரித்துறையாடி லென்
ஓங்கு மா கடல் ஓதநீராடிலென்
எங்கும் ஈசன் என்னாதவர்க்கில்லையே
என்கிற அப்பா தேவாரப்பாடலில் வரும்
கொங்கு குமரி மோகனூரையே குறிக்கும்'

திருக்கோயில் சிறப்பு :-

இங்கு வீற்றிருக்கும் சிவன் மேற்கு நோக்கியும் அன்னை கிழக்கு நோக்கியும் அமைந்துள்ளனர். இராமச்சந்திரநாயக்கர் காலம் கி.பி.1454 ஆம் வருடம் அமையப் பெற்றது.

நாயக்கர்காலத்தில் சேந்தமங்கலம் பாளையக்காரர்களால் இத்திருக்கோயில் அமைக்கப்பெற்றது.

வடக்கிலிருந்து தெற்கு செல்லும் நதியாக காவிரி இங்கு அமைந்துள்ளது. இத்திருக்கோவில் கருவறையில் உள்ள தீபம் அசையாத நிலையில் உள்ளது. எனவே அசையாத தீபம் கொண்ட சிவன் அசலதீபேஸ்வரர் என்கிற பெயரால் வழங்கப்படுகிறது.

ஆடி மாதம் 18ந் தேதி சிறப்பான விழாக்காலமாகும். ஏராளமான பக்தர்கள் ஆற்றில் நீராடி விட்டு இத்திருக்கோயிலை வணங்குவர்.

மாதந்தோறும் பிரதோஷ விழாவும் மிகவும் சிறப்பாக நடைபெறும். அசலதீபேஸ்வரனை சூரியன், ஸ்ரீ கிருஷ்ணர் சனிபகவான் அனைவரும் வழிபட்டுள்ளார். இத்திருக்கோவிலில் சிவலிங்கத்தின் அருகில் உள்ள விளக்கு எரிந்து கொண்டே இருக்கும். இந்த விளக்கு புயல் காற்றிலும் கூட ஆடாது, அசையாது. சீராக எரிந்து கொண்டிருக்கும்.

வருடத்தில் மூன்று முறை சூரியனின் ஒளிக்கதிர்கள் காலையில் அம்மன் மீதும் மாலையில் சிவலிங்கத்தின் மீதும் பட்டு ஒளிரும் காட்சி அழகும் அற்புதமும் வாய்ந்தன.

# நைனாமலை பெருமாள் கோவில்

2600 அடி உயரத்திலிருந்து அருள் பாலிக்கும் நைனாமலை வரதராஜ பெருமாள் நாமக்கல் மாவட்டத்தில் நாமக்கல் நகரில் இருந்து புதன்சந்தை வழியாக 14 கி.மீ. தூரத்திலும், புதன் சந்தையில் இருந்து சேலம் - திருச்சி பிரதான சாலையில் இருந்து 3 கி.மீ. தூரத்திலும் சேந்தமங்கலத்தில் இருந்து 5 கி.மீ தூரத்திலும் அமைந்துள்ளது. எங்கு நோக்கினும் பசுமை அழகுடன் இயற்கையன்னையின் எழிற்கோலம் காண்போர் உள்ளமெல்லாம் களித்துள்ளும் வண்ணம் அமைந்த பகுதியில் ஈடும் இணையுமில்லாத வனப்புடன் இம்மலை அழகுடன் திகழ்கிறது.

'நைநாமலை' என்னும் பெயர் கொண்ட இந்த உயர்ந்த பசுமையான மலையின் உச்சியில் சுமார் 2600 அடி உயரத்தில் அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோவில் அழகுடன் அமைந்துள்ளது. அருள்மிகு குவலயவல்லித் தாயார் சமேதவரதராஜப் பெருமாள் நின்ற கோலந்தாங்கி அருள் பாலிக்கிறார்.

**<u>திருக்கோயில் அமைப்பு</u>**

சேந்தமங்கலம் - புதன் சந்தை கிளைச் சாலையில் திருக்கோவில் நுழைவுப் பாதை தொடங்குகிறது. மலையின் அடிவாரத்தில் பாதமண்டபத்திலிருந்து மலையின் படிகள் தொடங்குகின்றன.

பாத மண்டபத்தில் கூப்பியகரங்களுடன் பக்தர்களின் நலனுக்குகாக இறைவனை வேண்டி வணங்கி நிலையில் அருள்மிகு பக்த ஆஞ்சநேயப் பெருமாள் திருவருள் பாலிக்கிறார். மாலையில் ஏறுவோர் பக்த ஆஞ்சநேயப் பெருமானை வணங்கி அருள் பெற்ற பின்னரே படிகளில் ஏறுவது மரபாகும்.

பாத மண்டபத்திலிருந்து மலையின் உச்சியில் அமைந்திருக்கும் அருள்மிகு வரதராஜப் பெருமானின் திருக்கோவில் வரை 3360 படிகள் அமைக்கப்பட்டுள்ளன.

பக்தர்களின் வசதிக்காக தங்கி இளைப்பாறும் வகையில் மலைப்பாதையின் இடையில் இரண்டு இளைப்பாறும் மண்டபங்கள் உள்ளன.

மலைப்பாதையின் வழியிலேயே வற்றாத ஊற்றுக்களான- "அரிவாள் பாழி" எனப்படும் நீர்ச்சுனையும் "அமைதியாதீர்த்தம்" என்றழைக்கப்படும் "பெரியபாழி" எனும் பெரிய சுனையும் இயற்கையாகவே அமைந்துள்ளன.

மலையின் உச்சியில் முகப்பிலேயே திருக்கோவிலின் "சமாராதனை மண்டபம்" எனப்படும் பெரிய மண்டபமும் திருமடைப் பள்ளியும் கட்டப்பட்டுள்ளன. மண்டபத்தில் விழாக்காலங்களில் பக்தர்கள் தங்கி ஓய்வெடுத்துச் செல்லும் வண்ணம் விசாலமாகக் கட்டப்பட்டுள்ளது. திருமடைப்பள்ளியைத் தாண்டியதும் திருக்கோவில் படிகள் தொடங்குகின்றன.

திருக்கோவில் படிகள் தொடங்கும் இடத்தில் அருள்மிகு வீரஆஞ்சநேயப்பெருமாள் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். வீர ஆஞ்சநேயரை அடுத்து வரதராஜப் பெருமாள் திருக்கோவில் உள்ளது. இத்திருக்கோவில் திருமலை நாயக்க மன்னரின் தம்பியான கோவிந்தப்ப நாயக்கரால் கட்டப்பட்டதாகும் உபய வரதராஜப்பெருமானின் திருக்கோவிலுக்கு வலப்புறம் பாறையில் வாலி சுக்ரீவர் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அதைத் தாண்டிச் சென்றவுடன் இத்திருக்கோவிலின் தல விருட்சமான நெல்லிமரம் உள்ளது. வரதராஜ பெருமான் சந்நிதி கம்பீரமாக மலையின் உச்சியில் அமையப் பெற்றுள்ளது. திருக்கோவிலின் மூலவராக அருள்மிகு வரதராஜப் பெருமாள் ஸ்ரீதேவி பூதேவி சமேதராக எழிற்கோலம் தாங்கி அருள்புரிந்து வருகிறார்.

இத்திருக்கோவிலின் கர்ப்ப கிரகம், அர்ந்த மண்டபம் மகா மண்டபம் என மூன்று மண்டபங்கள் உள்ளன. மகாமண்டபத்தில் இராம லட்சுமணர், சீதாதேவி, நவநீத கிருஷ்ணர், ராதாருக்மணி வேணு கோபால், துவார பாலகர்கள் ஆகியோரின் விக்கிரகங்கள் உள்ளன.

கருடாழ்வார் திருக்கோவிலின் எதிரில் கல்லாலான தீபஸ்தம்பமும் உள்ளது. தீபஸ்தம்பத்தில் பெருமாளுக்கு திருமஞ்சனம் செய்விக்கும் போதெல்லாம் திருக்கோடி தீபம் ஏற்றுதல் இத்திருக்கோவிலின் சிறப்புகளுள் ஒன்றாகும்.

பெருமாளின் வலதுபுறத்தில் அருள்மிகு குவலய வல்லி தாயாரின் தனி சந்நிதி அமைந்துள்ளது.

<u>அமைப்பின் அழகு</u> :

இத்திருக்கோயில் 2600 அடி உயரமுள்ள மலையின் உச்சியில் சுமார் 120 அடி உயரமுள்ள ஒரே பாறையின் உச்சியில் அமைந்துள்ளது. வானமே குடையாக மேகங்கள் தவழ்ந்தோடும் வகையில் ஒரே பாறையின் உச்சியில் அமைந்துள்ள இத்திருக்கோவிலின் வடிவழகும் இயற்கையழகும் காண்போர் உள்ளமெல்லாம் களி நடம் புரியச் செய்யும்.

தமிழ்மாதம் ஆனி முதல் தேதியிலிருந்து ஆடி மாதத் 30-ம் தேதி முடிய இரண்டு மாதங்களும் கதிரவன் உதிக்கும் போது கதிரவனின் கிரணங்கள் சுவாமியின் மீது நேரே விழுந்து பிரகாசிப்பது கண் கொள்ளக் காட்சியாகும்.

இத்திருக்கோவில் தோன்றிய காலம் இன்னதென கூற இயலாவிடினும் தற்போது உள்ள திருக்கோவில் பல்லவர் காலத்தியது என்று சொல்லப்படுகிறது.

1939 ஆம் ஆண்டில் திருக்கோவிலில் சுற்றுப்பிரகாரம் கட்டப்பட்டது. திருக்கோவிலின் சில பகுதிகள் திருமலை நாயக்கரின் தம்பி கோவிந்தப்பநாயக்கரால் கட்டப்பட்டவை திருக்கோவிலின் புராணப் பெருமைகள் நைனாமலை என்று அழைக்கப்படும் இந்த 'நயனமலை' இதிகாச காலத்திற்கு முன்பிருந்தே இருந்து வந்ததும் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகனாம் எம்பெருமான் தங்கி இருந்து அருள்பாலித்து வரும் திருத்தலங்களுள் முதன்மை ஆனதும் ஆகும்.

இந்த திருத்தலத்தின் பெருமை பிரம்மாவால் பாடப்பெற்று பிரம்மாண்ட புராணத்தில் பதினாறாவது அத்தியாயத்தில் தெளிவாக விளக்கப்படுகிறது. இம்மலைமீது 108 திர்த்தங்கள் இருந்ததாக கூறுகிறார்கள்.இன்றும் அரிவாபாழி, பெரியபாழி, இடுக்குப்பாழி, அம்மன் பாழி, பாண்டவதீர்த்தம் அல்லது ஐந்தனபாழி என்னும் 5 தீர்த்தங்கள் விளங்குகின்றன.

திருக்கோவிலின் பூஜைமுறைகள் தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது திருக்கோடி தீபம் ஏற்றுவது சிறப்பு அம்சமாகும். திருப்பதியை போன்றே பெருமாளுக்கு வாய்ப்பூட்டு பாதுகையுடன் கோமாளி வேஷம் ஆகியவை செலுத்துவது நடைமுறையில் இருந்து வருகிறது.

<u>**முக்கிய திருவிழாக்கள் :**</u>

புரட்டாசி மாதம் சனிக்கிழமைகளில் 50,000 பேர் முதல் 1 லட்சத்திற்கும் மேல் பக்தர்கள் பெருமாளைத் தரிசனம் செய்கின்றனர் புரட்டாசி சனிக்கிழமைகள ஆறும் ஆறு திருவிழா நாட்களாகவே நடைபெறுகின்றன.

மேற்கண்ட நாட்கள் நாமக்கல்லில் இருந்தும் சேலம் மற்றும் சேந்தமங்கலத்தில் இருந்தும் விழா பேருந்துகள் இயக்கப்படுகின்றன.

தை மாத உற்சவம் திருக்கிருத்திகை தீபம் சித்திரை மாதம் கடைசி வாரம் சிறப்பான வழிபாடுகள் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி ஆகியனவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

# சிந்தை கவரும் சிற்பங்களுக்கு தாரமங்கலம் கைலாசநாதர் கோவில்

சேலம் மாவட்டத்தில் சிற்பக்கலைக்கு பெயர் பெற்ற கோவில் தாரமங்கலம் கைலாசநாதர் கோவிலாகும்.

போசளன் வீரராமநாதன் கி.பி. 1286ம் ஆண்டுவாக்கில் இந்த கோயிலைக் கட்டினார். 16 ம் நூற்றாண்டில் இம்மடிகட்டி முதலி என்பவரால் கோவில் விரிவாக்கப்பணிகள் நடந்தன. இவர் விஜயநகர மன்னர் ஸ்ரீ ரங்கதேவன் காலத்தில் மதுரை திருமலை நாயக்கர் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர் என்பர்.

கெட்டி வம்ச அரசர்கள் கைலாசநாதரை தம் குல தெய்வமாகக் கொண்டு உயர் கோபுரம் கட்டி சிறு கோவிலை பேராலயமாக மாற்றினார். அவர்கள் படைப்பில் நாயக்கர் பாணி ஒவியங்கள், சிற்பங்கள் தனித்தன்மையாய் விளங்குகிறது.

தாரமங்கலம் கோவில் மற்ற கோவில்களிலிருந்து மாறுபட்டுள்ளது. இங்கே கோபுரவாசலில் நுழைந்ததும் உள்ளே படிகள் நம்மை கீழ்நோக்கி அழைத்துச் செல்கிறது. காரணம் கோபுரத்தைத் தேர் போல வடிவமைத்து அந்தத் தேரை குதிரைகளும் கல்யானைகளும் உள்புரம் நோக்கி இழுத்துச் செல்கின்றன. இங்கு சிற்பிகளின் கற்பனை மேலோங்கி நிற்கிறது.

கோவிலின் வெளிப்பிரகாரத்தில் ஒரு சிறு பிள்ளையார் கோவில் மொத்தம் 9 கற்களால் அமைக்கப்பட்டது. அதிசியமான செய்தி.

விநாயகர் பீடத்தினருகே கல்லில் ஒரு துவாரம், மூன்றுங்குல நீள்த்தில் உள்ளது. அதில் ஒரு அருகம்புல் மாத்திரம் செல்லுமளவுக்கு உள்ளது.

உட்பிரகாரத்தில் ஆறு தூண்கள் உள்ளன. இரண்டில் யாழி சிற்பங்கள் உள்ளன. ஒரு யாழியின் வாயில் சுழலும் பந்து போன்ற உருண்டையான ஒரு கல் சுழல்கிறது. பந்து ஒன்றின் விட்டம் 4

அங்குலம் . விரல் விட்டு அதனை உருட்டலாம் ஆனால் வெளியே எடுக்க முடியாது. பொறுமை கடலினும் பெரிது என்பதற்கு இந்த சிற்பத்தைக் காட்டலாம்.

ஒரே கல் தூணில் வேலைப்பாடுகளையும் முன்புறம் யாளியின் மேல் வீரன் அமர்ந்திருக்க அந்த யாளி ஒரு யானையின் இரு கால்களையும் தரையை நோக்கி அழுத்திக்கொண்டு நிற்க, யானை யாழியின் முன்புறம் தொங்கும் சதைக்கோளத்தைத் தன் தும்பிக்கையால் பிடித்து இழுப்பது போன்றும் அமைத்துள்ளனர்.

இந்த சிலை எப்படி செதுக்கப்பட்டது என்பதை நாம் அறிந்துக் கொள்ள இதைப் போன்ற இன்னொரு சிலையும் உள்ளது. அந்த யாளியின் வாயிலுள்ள கல் முக்கால் பாகம் மட்டுமே செதுக்கி விடப்பட்டுள்ளது.

கோவில் முகப்பிலுள்ள தூணில் இருபுறமும் வீரனின் சிலை. சிறுத்தை புலியொன்று ஒருவனை கடித்து நிற்க, அவன் கையிலுள்ள குறுவாள் சிறுத்தையின் உடலில் பாய்ந்து மறுமுனை வெளியே தெரிகிறது. அவனை காப்பாற்ற வந்த வீரன் குதிரையின் மீது அமர்ந்தவாறே சிறுத்தையை தன் கை வேலால் குத்தியிருப்பது போன்று சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.

கோவிலினுள் ஜுரகேஸ்வரர் என்ற கடவுளும் உண்டு. இம்மூர்த்தியை அர்ச்சனை செய்து வழிப்பட்டால் தீராத காய்ச்சலும் தீரும் என்பது நம்பிக்கை.

அங்குள்ள கற்சிலைகள் ரசிக்க தகுந்தவை. ஒளி செல்லும் பாதையில் எதிர்ப்படும் பொருளே கண்ணுக்குத் தெரியும், என்னும் கோட்பாட்டின்படி சிற்பிகள் சிலைகளை வடித்துள்ளனர்.

இங்குள்ள ரதி, மன்மதன் சிலைகள் வித்தியாசமானவை. மன்மதனை தனது நெற்றிக்கண்ணால் எரித்துவிட, கலங்கமுற்ற ரதி சிவனிடம், நான் என் பதியைப் பார்க்க வழி செய்யுங்கள் " என

கேட்க, சினம் தணிந்த சிவன், 'மன்மதன் உன் கண்களுக்கு மட்டும் தெரிவான்' எனக்கூறியதாகச் சொல்வர். அதனை விளக்கும் வகையில் ரதி, மன்மதன் சிலைகள் உள்ளன. ரதி சிலையிலிருந்து பார்த்தால் மன்மதன் முகம் தெரியும். ஆனால் மன்மதன் சிலையிலிருந்து ரதி முகம் தெரியாது.

இதே போல வாலி, சுக்ரீவன் சண்டை காட்சிகள் இரு தூண்களில் சித்தரிக்கப்பட்டுள்ளது. சுக்ரீவனுடன் போரிட்ட வாலியை ராமன் மறைந்து அம்பு எய்தி கொன்றதாக ராமாயணம் கூறுகிறது. இச்சம்பவத்தை விளக்கும் வண்ணம் ராமன் சிலையிலிருந்து பார்த்தால் வாலி நன்றாக தெரிவான். ஆனால் வாலியின் சிலை அருகேயிருந்து பார்த்தால் ராமன் சிலை தெரியாது.

கைலாசநாதர் ஆலய மூலஸ்தானத்தில் 7 அடி விட்டமுள்ள கற்பலகை ஒன்று நிற்கிறது. அதில் கல் தாமரை மலர், அதனைச் சுற்றி கிளிக்கூட்டம் தாமரையைக் கொத்தி விளையாடுவதைப் போலுள்ளது. இதனை ஒரு மூங்கில் கழியைக் கொண்டு சுற்றினால் அந்த கல் தாமரை சுற்றும். விமானத்திலுள்ள கல் சங்கிலிகள் காற்றில் அசைந்தாடுகின்றன. மேலும் அங்குள்ள ஊடல் தீர்த்த விநாயகர், ஊர்த்தாண்டவர், ரிஷிபத்தினி, மோகினி, பிச்சாடனர் ஆகிய சிற்பங்களும் சிறந்தவை.

தாரமங்கலம் சிவன் கோவிலுக்கு மேற்கே பத்ரகாளியம்மன் கோவில் உள்ளது. அதனருகே பிரசித்த பெற்ற 'எண்கோண வடிவ குளம்' உள்ளது. இக் குளத்தின் அடிப்பகுதி சதுரம், அடுத்து எண்கேணம், அதற்கு மேல் வட்ட வடிவம். அவற்றிற்குத் தெற்கு, மேற்கு இரு திசைகளிலும் வாயில்கள் உண்டு. இக்குளத்தில் ஒரு கல் எறிந்தால் அது வட்ட வடிவமாக சுற்றி நாம் கல் எறிந்த இடத்திற்கே வந்து சேரும்.

தமிழ் தாத்தா உ.வே.சா. கூட இக்குளத்தை நேரில் பார்த்து வியந்துப் போனதாகக் கூறுவர்.

இவ்வூரில் மேலும் இரு குளங்கள் உள்ளன. பெரிய குளம்



180 அடி நீளமுடையது. குளச்சுவரில் 36 கருங்கல் நந்தி உருவங்களும், உட்புறச் சுவரில் 360 விளக்கு மாடங்களும் உள்ளன. குளத்தின் மையத்தில் 16 கால் மண்டபம் உள்ளது.

இதனருகேயுள்ள இன்னொரு குளத்தின் சுவரில் தாரமங்கலத்தையாண்ட கெட்டியரசர்களின் உருவங்கள் புடைப்பு சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இக்கோவிலுள்ள மூலவர், மீது வருடத்தில் மூன்று நாட்கள் மாசி மாதம் 9,10,11 ஆகிய தேதிகளில் கோபுரவாசல் வழியாக மாலை சூரியன் மறையும் நேரத்தில் நந்தியின் கொம்பு வழியாக சூரிய ஒளி சுவாமி மீது விழும். வருடந்தோறும் இந்த அதிசயத்தைக்காண ஏராளமான பக்தர்கள் வருகிறார்கள்.

இடப்புற மண்டபத்திலுள்ள சகஸ்ரலிங்கத்தின் மேல் 1008 சிறிய லிங்கங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தைப்பூசம் அன்று தேர்த்திருவிழாவும், கார்த்திகை தீபமும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

# உத்தமசோழபுரம் கரபுரநாதர் கோவில்

சேலத்திலிருந்து சுமார் 8 கி.மீ தொலைவில் உள்ளது. உத்தம சோழபுரம்.

இங்குள்ள கரபுரநாதருக்கு பூஜைகள் செய்து வந்த சிவ பக்தன் ைசவநாதன் - குணபதி தம்பதியாருக்கு நீண்ட நாட்களாய் குழந்தை பாக்கியம் இல்லை. சிவபெருமான் அருளால் அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது அக்குழந்தைக்கு 'சிவ சீலன்' எனப் பெயரிட்டனர். அக்குழந்தை வளர்ந்து வரும் காலத்தில், தந்தை சிவபாதமடைய சிவனுக்கு பூஜைகள் அந்த சிறுவனே செய்ய நேரிட்டது.

முறைப்படி, அந்தச் சிறுவன் கரபுநாதருக்கு பூஜை செய்ய ஆரம்பிக்க, அங்குள்ள சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்ய திருமுடி எட்டாமல் போக, சிறுவன் இந்நிலை குறித்து வருத்தி அழ சிவனாகிய கரபுநாதரே தனது முடியை வளைத்துக் கொடுக்க சிறுபாலகன் பூஜை செய்த சிறப்புப் பெற்றது, இத்தலமாகும்.

ஔவையார் கொல்லிமலை ஓரியையும், தர்மபுரி (தகடூர்) அதியமானையும் சந்தித்த பின்னர், பாரி வள்ளலின் மகள்கள் அங்கவை, சங்கவையின் திருமணங்கள் இந்த ஆலயத்தில் தான் நடைப்பெற்றன. ஔவையார் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் மூவரையும் கரபுநாதர் ஆலயத்திற்கு வரவழைத்து அவர்கள் முன்னிலையில் அங்கவை, சங்கவை திருமணம் முடிந்த பின்னர் அவர்கள் ஞாபகமாக மூன்று நகரங்களை உருவாக்கச் சொன்னார்.

அதன்படி, சேர மன்னன் அமைத்த பகுதி சேலம் என்றும், பாண்டிய மன்னன் அமைத்த பகுதி வீரபாண்டி என்றும், சோழ மன்னன் அமைத்த பகுதி உத்தம சோழபுரம் என்றும் வழங்கப்படுகிறது.

ஒருமுறை இராவணன் சகோதரன் கரதூசணன் ஆயிரம் ஆண்டு தவம் செய்த அக்னி பிரவேசம் செய்யும் நேரத்தில் 'நில்'

என்று அசரீ குரல் கேட்டு நின்றான். இறைவன் காட்சியளித்து அருளினார்.எனவே சிவபெருமானை கரதூசணன் பூஜித்தால் 'கரபுரநாதர்' என்றழைக்கப்பட்டார்.

திரேதயுதத்தில் கரபுரம் என்றும், கலியுகத்தில் சோழபுரி என்று வழங்கப்பட்டதாக தலபுராணம் கூறுகிறது.

ஔவையாருக்கு இக்கோவிலில் தனியே சிலையும் வைத்துள்ளார்கள். கடையெழு வள்ளல்களில் ஒருவரான அதியமான் நீண்ட ஆயுளைத்தரும் கரும் நெல்லிக்கனியை கரபுரநாதர் ஆலயத்திற்கு அருகேயுள்ள கஞ்சமலை சித்தரிடருந்து பெற்று ஔவைக்கு அளித்தாக வரலாறு கூறுகிறது.

சிங்கமுகமுடைய ஒரு கொடியவன் காசி நகரிலிருந்து வந்து நான்கு வேதியர்களை கொன்றதால் சாபம் பெற்று பேயாகித்திரிய, கரபுரநாதர் கோவிலுள்ள வினைதீர்த்த விநாயகரை வணங்க இப்பிணி தீரும் என்று கூற, அதன்படி பிணி நீங்கி பேரின்பம் அடைந்தான்.



இக்கோவிலுள்ள லிங்கம் ஒரு பக்கமாக சார்ந்த நிலையில் உள்ளது.

சுவர்க்க, மத்திய பாதாளம் என மூன்று உலங்களிலும் தொந்தரவுகள் செய்து வந்த மகிஷா சூரனுடைய கொடுமைகள் தாங்காமல் தேவர்கள், முனிவர்கள் ஒன்று கூடி கரபுரநாதர் ஆலயத்திலுள்ள துர்க்கையிடம் முறையிட, துர்க்கை அரக்கனுடன் போரிட்டு அவனை அழித்தாள். மேலும் உத்தம சோழபுரத்து அரசன் மீது பகையரசன் படையெடுக்க, உத்தமசோழ அரசன் துர்க்கையிடம் முறையிட, எதிரிகளுக்கு அம்மை இறங்கி அவர்களின் ஆணவம் அடங்க செய்தாள்.

காவிரிப்பூம்பட்டிணத்தில் வசித்த கெஜவர்த்தகன் என்ற வணிகன் உத்தம சோழபுரத்து கரபுரநாதரை வணங்கி தனக்கு தொழிலில் லாபம் கிடைத்ததால் கோவில் கட்டி வைப்பதாய் பிரார்த்தனை செய்தான்.

அதன்படி வியாபாரத்தில் அதிகலாபம் கிடைக்க, கோவில் திருப்பணியை மேற்கொண்டு ஆலயத்தைக் கட்டி முடிந்தான்.

அந்த வணிகனின் செயலைப் பாராட்டி மூவேந்தர்களும் ஔவையாரின் வேண்டுகோளுக்கிணங்க நிலபுலங்கள் ஈந்து மகிழ்வித்தனர்.

# திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர்

சேலத்திலிருந்து 45 கி.மீ தொலைவில் உள்ளது திருச்செங்கோடு. இங்குள்ள குன்றின் பெயராலே இவ்வூர் வழங்கப்படுகிறது.

கொங்கு நாட்டில் பாடல் பெற்ற தலங்களில் மூன்றாவது தலமாக விளங்குவது கொடிமாடச்செங்குன்றூர், கொடிமாடச் செங்குன்றூர் என்றால் கொடிகள் அசைந்தாடுகின்ற மாடமாளிகைகள் நிறைந்த செந்நிற மலையையுடைய ஊர் என்று பொருள். பின்பு இவ்வூர் 'திருச்செங்கோடு' என்று வழங்கலாயிற்று.

திருச்செங்கோட்டின் பழைய பெயர் கொடிமாடச் செங்குன்றூர் என்பதாகும். திருச்செங்கோட்டு மலை தென்கிழக்காக கடல் மட்டத்திலிருந்து 1901 அடி உயரம் கொண்டது. இந்த மலை உச்சியில் அர்த்தநாரீஸ்வரர் கோவில் உள்ளது.

இங்குள்ள ஈஸ்வரன் (மூலவர்) லிங்க வடிவில் இல்லாமல் அம்மை, அப்பன் (ஈஸ்வரன், பார்வதி) ஆண், பெண் சரிப்பாதியாக கலந்த நிலையில் உள்ளது ஆச்சரியமான செய்தி. இப்படி உமையொரு பாகனாய் உள்ள அர்த்தனாரீஸ்வரனை வேறு எங்கும் காண முடியாது.

இந்த செங்குன்றுக்கு நாமகிரி நாகமலை, செங்கோடு, உரகவெற்பு, காளகிரி, சர்ப்பக்கிரி, சர்ப்பக்கேந்திரம் எனப்பல திருப்பெயர்கள் உண்டு.

இம்மலை தோன்றிய வரலாறு மிகவும் புராணச் சிறப்பு வாய்ந்தது. ஒரு சமயம் வாயு பகவானுக்கும், ஆதிசேசனுக்கும் தங்களுள் யார் பெரியவன் என்று வாதிட்டனர். இதுவே போட்டியாக உருப்பெற்றது. இமயமலை சிகரம் ஒன்றை ஆதிசேஷன் சுற்றிக்கொள்ள வேண்டும். வாயு பகவான் அதனை அங்கிருந்து பெயர்த்து எடுக்க வேண்டும் என்பது தான் போட்டி

போட்டியின்படி, ஆதிசேஷன் மலைச் சிகரத்தைக் காற்று நுழைய துளி இடம் விடாமல் சிகரத்தை சுற்றிக் கொண்டார். வாயு பகவான் தன் வலிமை முழுவதையும் பயன்படுத்தி பெருங்காற்று அடிக்க முடிவு செய்தான். இதனால் உலகமே அழிந்து விடுமென தேவர்கள் அஞ்சினர். எனவே அவர்கள் ஆதிஷேனை சிறிது விட்டுக்கொடுக்க முடியை சிறிது அசைத்தான். உடனே வாயுதேவன் அங்கு ஏற்பட்ட மிகச்சிறிய இடைவெளியில் மலையை வேகமாக தூக்கிக் கொண்டு வந்து தற்போது உள்ள இடத்தில் வைத்து விட்டான். வாயுதேவன் மலையைப் பெயர்த்த போது ஆதிசேஷன் முடியில் காயம் ஏற்பட்டது.

இரத்தம் தோய்ந்த அந்த மலை திருச்செங்கோட்டில் வந்து விழுந்தது. கேட்டதை எல்லாம் அளிக்கும் காமதேனு என்னும் தெய்வப்பசு சிவனிடமிருந்து 5 குன்றுகளை கொடையாகப் பெற்றது

இவ்வாறு ஆதிசேஷன் இரத்தம் தோய்ந்த மலையாக ஒரு புறமும், ஆண் பெண் என்ற இரு பேர் உறவுக் கொண்டு விளங்கும் இக்குன்று சிவபார்வதி ஐக்கியத்தை உணர்த்தி நிற்கிறது. மலை மீது ஏறிச் செல்ல சுமார் 1200 படிக்கட்டுகள் உள்ளன. இடையிடையே மலையேறுபவர்கள் இளைப்பாற மண்டபங்கள் உள்ளன.

மலைமேல் தைலி மண்டபத்துக்கு மேற்கு முழுவதும் வெண்ணெய் பூசப்பட்ட நந்தி இருக்கிறது. நந்தி குன்றை நோக்கி அமைந்துள்ளது. இக்குன்றே சிவலிங்கமாக கருதப்படுகிறது.

சக்தியை வணங்கமாட்டேன். சிவனைத் தான் வணங்குவேன் என்று சபதம் கொண்ட பிருங்கி முனிவருக்கு 'சக்தியும் சிவனும் ஒன்றே' என்று வலியுறுத்தியது இத்தலத்தில் தான்.

இந்த ஆலயத்திலுள்ள பெருமானை ஆதிசேஷன் பூஜித்ததாகக் கூறப்படுகிறது. 60 அடி நீளம் கொண்ட 5 தலை

நாகத்தின் சிலை ஒன்று மாலைப்பாதை ஓரத்தில் கல்லிலே செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். மேலும் பல இடங்களில் நாகர் சிலைகள் காணப்படுகின்றன. இதற்கு பூஜை செய்து வழிப்பட்டால் நாகதோஷம் நீங்கும் என்பர். இதற்கு மேல் 60 படிகள் உள்ளன. இதனை சத்தியபடிகள் என்பர். இப்படிகளின் மீது சத்தியம் செய்வதால் பெரிய வழங்குகள் கூட தீர்க்கப்படுகின்றனவாம்.

இங்குள்ள வேலர் சன்னதி விசேஷசமானது. அர்த்தநாரீஸ்வரர் இச்சன்னதி மேற்கு நோக்கியும்,வேலவர் சன்னதி கிழக்கு நோக்கியும் உள்ளது.

திருஞான சம்பந்தருக்கு கொங்குநாட்டு யாத்திரையின் போது நளிர்சுரம் பற்றி வருத்த அவர் திருச்செங்கோட்டு திருமடத்தில் தங்கி அங்குள்ள சுரகண்டீசுரர் மீது பாடல் பாடியதால் நளிர்சுரம் நீங்கியதாக கூறுகிறார்கள். எனவே முறைக்காய்ச்சலால் சிரமப்படுபவர்கள் அங்குள்ள சுரகண்டீசவரரை வணங்கினால் நலம் பெறுவர் என்பது நம்பிக்கை.

<u>வரடிக்கல்</u>

மலையிலுள்ள மிகஉயர்ந்த சிகரத்தின் மீது பாண்டீசுவரர் கோவில் இருக்கிறது. இதைக் கட்டியவர் 13 ம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர்கள் எனக்கருதுவர். இதற்கு அருகில் 'வரடிக்கல்' என்ற பெரிய பாறை சிகரம் உள்ளது. இப்பாறை செங்குத்தான மலைப்பிதுக்கத்தில் வெளி வந்திருக்கிறது. இதனை மகப்பேறு இல்லாதவர்கள் மூன்று தரம் சுற்றி வந்தால் மகப்பேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை. உயிரை பணயம் வைத்துத்தான் மலையை சுற்ற வேண்டும்.

தடுப்புச் சுவர் கட்டப்பட்ட காலம் சேலம் மாவட்ட முன்னாள் ஆட்சித்தலைவர் லாங்லீ (Long Leigh) இன் காலம் ஆகும்.

ஆனால் இந்த வரடிக்கல்லை சுற்றும்போது மிகவும் கவனமாகச் சுற்ற வேண்டும். கொஞ்சம் கவனம் சிதறினாலும் மரணம் உறுதி. (இக்கல்லின் எடை சுமார் 25 டன் எடையிருக்கும்)

வரடிக் கல்லிவிருந்து கொஞ்சம் இடறினாலும் கீழே 800 அடிப் பள்ளத்தில் விழும் அபாயம் உள்ளது. எனவே இப்பொழுது வரடிக்கல்லுக்கு தடுப்புச்சுவர் எழுப்பி விட்டதால் இப்போது வரடிக்கல்லை யாரும் சுற்ற முடியாது.

அர்த்தனாரீஸ்வரர் ஆலயத்திலிருந்து பாண்டிஸ்வரர் கோவில், வரடிக்கல் ஒரு கிலோமீட்டர் தொலைவு கொண்டது.

அர்த்தநாரீஸ்வரர் ஆலயத்தில் சிந்தை கவரும் சிற்பங்களும், மலையடிவாரத்தில் நாகர் பள்ளத்தில் 60 அடி நீளம் கொண்ட ஆதிசேஷன் சிற்பமும் கலை அம்சம் கொண்டதாகும்.

இங்கு பைரவர் தீர்த்தம், குபேர தீர்த்தம், தேவதீர்த்தம், கணபதி தீர்த்தம், நாக தீர்த்தம், சிவ தீர்த்தம், பாபநாச தீர்த்தம் போன்ற தீர்த்தங்கள் உள்ளன.

கோவில் வாயில் மண்டபம் கி.பி.1654 ல் சியாளகட்டி முதலி என்பவரால் கட்டப்பட்டது. இதனைத் தாண்டி கோவிலுக்கு செல்லும் முக்கிய வாயிலை அடைகிறோம். மலைக்கோபுர வாசலுக்கு 20 அடி பள்ளத்தில் தான் சன்னதி உள்ளது. மகா மண்டபம் சங்ககிரி துர்க்க கவர்னராக சாம்போஜி என்பவரால் துவக்கப்பட்டு, கி.பி. 1684 ல் கட்டி முடிக்கப்பட்டது.

நிருத்த மண்டபம் கி.பி. 1699 ல் ஆதப்ப நல்ல தம்பி காங்கேயன் என்பவரால் கட்டப்பட்டது. தாரமங்கலத்துச் சிற்பங்களை போலவே அற்புதமான சிற்பங்கள் இங்கும் உண்டு. சிவனின் ஊர்த்தாண்டவம், கோவில்களைச் சுற்றிலும் யாழியின் சிற்பங்கள், நந்தி மத்தாளம் கொட்டுவது, ரதி மன்மதன், கல்லில்

சங்கிலி செய்வது, குறத்தி குறி சொல்வது போன்ற காட்சிகள், ஒரு சில தூண்களில் ஆதப்ப நல்லதம்பி காங்கேயன் அவனது மனைவியரது சிற்பங்களும் செதுக்கப்பட்டுள்ளன.



குன்றின் அடிவாரத்தில் சமணர் படுக்கைகள் உள்ளன. இதனை பஞ்ச பாண்டவர் படுக்கை என்றழைக்கின்றனர்.

திருச்செங்கோட்டு மலையை தென் மேற்கு பகுதியான சிறுமொளசி செல்லும் பகுதியிலிருந்து பார்த்தால் ஒரு தேவலோக பெண் பிறந்த மேனியாக நெடுங்கிடையாக படுத்து வானவெளியை பார்த்துக் கொண்டுள்ளதை போல உள்ளது. வடமேற்கு பகுதியான ஆனங்கூர் ரோட்டிலிருந்து பார்த்தால் ஒரு தேவலோக ஆண் பிறந்த மேனியாக நெடுங்கிடையாக படுத்திருப்பது போலத் தெரியும்.

கிழக்கேயிருந்து பார்த்தால் இமயமலை பனி லிங்கம் போலவும் மேற்கே இருந்து பார்த்தால் பசுமாடு படுத்திருப்பது போலவும் காட்சி அளிப்பதை காணலாம்.

# கொல்லிமலையிலுள்ள அறப்பளீஸ்வரர் கோவில்

நாமக்கல்லிருந்து சுமார் 60 கி.மீ தொலைவில் உள்ளது.கொல்லிமலை அறப்பளீஸ்வரர் கோவில். இது கடல் மட்டத்திலிருந்து 4500 அடி உயரத்தில் உள்ளது.

கொல்லிமலை உச்சியில் வளப்பூர்நாடு என்னும் பகுதியில் சுமார் 1300 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிவலாயம் உள்ளது. இவ்வாலய நுழைவாயிலில் அடியார்களால் பூஜிக்கப்படும் லிங்கமும், இரு யானைகளின் உருவங்களும் உள்ளன.

இக்கோவிலுள்ள லிங்கத்தை கரிகாலன் வைத்து வழிப்பட்டதாகவும், அவனை தொடர்ந்து ஓரி மன்னனும், மகேந்திரவர்மனும், வழிபட்டதாக கூறப்படுகிறது. இக்கோவிலின் அருகே ஓடும் ஐந்தாற்றின் முடிவில் 300 அடி உயரத்திலிருந்து ஆகாய கங்கை நீர் வீழ்ச்சியாக விழுகிறது.

கருவறையில் மூலவரான அறப்பளீஸ்வரர் லிங்க வடிவில் அருள் புரிகிறார். இவருக்கு மகாலிங்கநாதர், தர்மகோளீஸ்வரர் என்ற பெயர்களும் உண்டு. மற்றொரு தனிச் சந்நிதியில் தர்மகோளீஸ்வரி, தாயம்மன் ஆகிய பெயர்களுடன் அம்மன் திகழ்கிறார் காசி விசுவநாதர், விசலாட்சியம்மனின் சந்நிதியில் காசியிலுள்ள ஆலயங்கள் அமைப்பை பெற்றுள்ளன.

விநாயகர், வள்ளி, தெய்வானை முருகப் பெருமானுக்கு தனித்தனி சந்நிதிகள் உள்ளன. உட்பகுதியில் சூரியன், சந்திர, நவகிரகங்கள், சண்டேஸ்வரர், மகாலட்சுமி,சரஸ்வதி ஆகியோரைக் காணலாம்.

கருவறையின் புறச்சுவர்களில் கோஷ்ட பஞ்சரங்களில் பிரம்மா, விஷ்ணு, தட்சிணாமூர்த்தி, துார்க்கை ஆகிய வடிவங்கள் சிற்பங்களாக வடிவமைக்கப்பட்டுள்ளது, சிவகாமி சமேதரான நடராஜர் போன்ற 30 உற்சவ விக்கிரங்கள் இவ்வாலயத்தில் உள்ளன.

கொல்லிமலைப்பற்றி திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் 'அறைப்பள்ளி', 'கொல்லி குளிர் அறைப்பள்ளி' கமழ் கொல்லி அறைப்பள்ளி என குறிப்பிட்டுள்ளனர். அருணகிரி நாதர் திருப்புகழில் கொல்லிகுமரனை இரு பாடலில் பாடியுள்ளார்.

இவ்வாலயத்தில் நாள்தோறும் ஐந்து கால வழிபாடுகள் முறையாக நடைபெறுகின்றன. ஆடிமாதத்தில் 3 நாட்கள் திருவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. சித்திரை விழா, திருவாதிரை, மகாசிவராத்திரி பொங்கல் விழாக்கல் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.



கொல்லிமலை என்றாலே திகில் ஏற்படுத்துவது "கொல்லி பாவை" தான் இக்கொல்லிப்பாவை தெய்வப்பெண் கொல்லி மலையில் தவம் செய்த தேவர்களையும், முனிவர்களையும் துன்புறுத்திய அசுரர்களையும் அழிக்கும் வகையில் உருவாக்கப்பட்டது தான் "கொல்லிப் பாவை" என்று கூறப்படுகிறது. அசுரர்கள் வாடைப்பட்ட உடனே தனது அழகால் கவர்ந்து அருகே சென்ற உடன் அவர்களை கொல்லும் பாவையாக இருந்ததால் 'கொல்லிமலை' என்றாயிற்று.

இப்பாவை இடி, மழை, மின்னல் போன்ற இயற்கை சக்திகளினால் பாதிக்கப்படுவதில்லை. எனவே இங்குள்ள மக்கள்

கொல்லிப்பாவையை காவல் தெய்வமாகக் கருதி வணங்கினார்.

மாசிமலையருவி, தழிகையாறு, நாக்காட்டாறு, கானப்பாடி, மூலையாறு ஆராய்ச்சி ஆறு என ஐந்து அருவிகளுடன் ஆகாய கங்கை நீர் வீழ்ச்சியாக பலத்த இரைச்சலுடன் கொட்டுகிறது. இந்நீரில் நோய் தீர்க்கும் மூலிகைகள் கலந்துள்ளதால் நோய்வாய் பட்டவர்கள் இந்த அருவியில் குளித்தால் நோய் தீரும்.

அறப்பளீஸ்வரர் ஆலயத்தில் இருபது கல்வெட்டுகள் கிடைத்துள்ளது. சோழ மன்னர்கள் பரகேசரிவர்மன், ராஜகேசரி வர்மன், குலோத்துங்க சோழத்தேவர் பராந்தக சோழன் ஆகியோர் காலத்தில் அளிக்கப்பட்ட மானியங்கள் பற்றிய தகவல்கள் இவை தெரிவிக்கின்றன.

இக்கோவிலின் மூலக்கருவறை விமானம் சோழப் பேரரசி செம்பியின் மகாதேவியின் (10-ம் நூற்றாண்டு) காலத்தின் காட்டப்பட்டதாக வரலாற்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஆண்டுதோறும் ஆடி 18 அன்று வல்வில் ஓரிவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

# வல்வில் ஓரி வழிப்பட்ட கைலாச நாதர் ஆலயம்

*சேலத்திலிருந்து 27 கி.மீ. தொலைவில் உள்ளது. ராசிபுரம் கைலாய நாதர் கோவில்.*

*இராசிபுரம் கொங்கு நாட்டு பிரிவுகளுள் ஒன்றாகும். ராசிபுரம் ராசிபுர நாட்டின் தலைநகரமாகியிருந்தது. முற்காலத்தில் இராசிபுரம் இராஜபுரம் என்றம் ஸ்ரீராஜபுரம் எனவும் விஜய நகர மன்னர்கள் காலத்தில் ராசிபுரம் என்றும் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ராசிப்பூர் என்றும் வழங்கப்பட்டது.*

*இந்த கைலாசநாதர் ஆலயம் நான்கு யுகங்களால் பூஜிக்கப்பட்டுள்ளது. கிரேத யுகத்தில் இந்திரனால் பூஜிக்கப்பட்டு ஜம்புக வனமுமாயும் பாயவினாச தீர்த்தம் கொண்டு இந்திராபுரம் என்ற பெயருடன் ஸ்ரீ நீலகண்ட மூர்த்தியாய் அருள் பாலித்தார். திரேதா யுகத்தில் நவக்கிரகங்கள் பூஜித்தபடியால் ரேகாலினாச தீர்த்தம் கொண்டு சந்திரசேகர மூர்த்தியாய் விளங்கினார். துவாபரயுகத்தில் சித்தர்கள் வணங்கியதால் மங்கள தீர்த்தமும் விசித்திரபுரம் என்ற பெயருடன் விளங்கினார். கலியுகத்தில் வேடன் ஆதிசைவன் பூஜித்ததால் சிவகங்கை தீர்த்தத்துடன் ஸ்ரீ ராஜபுரம் (ராசிபுரம்) என்ற பெயருடன் விளங்குகிறார் இறைவன்.*

*கி.பி.120 முதல் 150 வரை கொங்கு மண்டலம் என கூறப்படும் காலத்தில் கொல்லி மலையை ஆண்ட கடையெழு வள்ளல்களில் ஒருவரான ஓரி சிறந்த சிவ பக்தராக இருந்து வந்தார்.*

*ஒரு சமயம் வல்வில் ஓரி தனது படைகளுடன் ராஜபுரம் பகுதிக்கு வேட்டைக்கு சென்றார். அப்போது ஒரு காட்டுப் பன்றியை குறி வைத்து துரத்திச் சென்றார். அப்பொழுது அந்த பன்றி இலந்தை வனத்தில் மறைந்து விட்டது.*

*பின்னர் தேடி அம்பு எய்தினான். ஓரிவிட்ட அம்பு ஒரு புலி, யானை, மான், உடும்பு ஆகியவற்றை வீழ்த்தி பன்றி மீது அம்பு*

தைத்தது. அருகே சென்ற போது அங்கு பன்றியைக் காணவில்லை. அங்கு ரத்தம் வழிந்து நிலையில் லிங்கம் இருப்பதை கண்டான் ஓரி.

உள்ளம் வருந்தி அழுது புரண்டான் ஓரி. உடனே இறைவன் காட்சி தந்து 'யாம் உனது பக்தியை சோதனை செய்யவே இவ்வாறு செய்தோம் . . . இந்த இடத்தில் எனக்கொரு ஆலயம் எழுப்புங்கள்' என்று கூறி மறைந்தான்.

வல்வில் ஓரி கிழக்கு பார்த்து விழுந்து தரிசித்தாலும் சர்வேஸ்வரன் மேற்கு பார்த்து காட்சி தந்ததாலும் கோவிலின் சந்நிதி மேற்கு பார்த்து அமைந்துள்ளது.

ஓரி அம்பு விட்டதற்கு சாட்சியாக தற்போது கைலாசநாதர் ஆலயத்திலுள்ள லிங்கத்தில் வளைவான ஆழமான வடு இன்றும் இருக்கிறது. அபிஷேகம் செய்யும் போது இதனை காணலாம்.

கி.பி. 1300 ல் வீர பிரதாபத் தேவன் கோவிலை புதுப்பித்து கட்டினார். கி.பி. 1535 ல் ஆலயத்தின் முன் கோபுரம் கட்டப்பட்டது என்பதை கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

கரிய பெருமாள் கோவில் கல்வெட்டிற்கு கீழே 1534 ஆம் ஆண்டு கிருஷ்ண தேவராயர் காலத்தில் (கரிய) பெருமாள் வம்சத்தினர் கோவிலுக்கு சிறப்பு செய்த செய்தியும், கோட்டை வாசல் தூணிலுள்ள சொக்கநாத நாயக்கர் கல்வெட்டில் 1671 ல் விரோதி வருஷம் ஞாயிறு திரியோதசியும் மங்கள வாரமும் அஸ்த நட்சத்திரமும் கூடிய நாளில் தானம் அளிக்கப்பட்ட செய்தி உள்ளது.

கைலாசநாதர் கோவிலுக்குத் தானங்கள் பலவும் சித்திரையில் கொடுக்கப்பட்டுள்ளது. அதனால் தான் பண்டிகையும் சித்திரையில் நடக்கிறது.

கைலாசநாதர் கோவிலுள்ள முருகன் மீது அருணகிரிநாதர் 'சங்குவார் முடி ராஜபுரத்து பெருமானே' என்று ஒரு பதிகம் பாடியுள்ளார்.

ராசிபுரத்தில் ஓரியின் போர் பற்றி "நீர் கரிமீமிசை . . . என பதிற்றுப்பத்தில் இடம் பெற்றுள்ளது. வண்பரணர் ஓரியின் சிறப்பை 'வேழம் வீழ்த்த வலம் படுத்தோன்' என புறநானூற்று பாடியுள்ளார்.

கைலாசநாதர் மேல் பாடப்பட்டுள்ள நூல்கள்.

1. சேலம் சிதம்பரம் பிள்ளை என்பவர் 1753 ம் ஆண்டு கைலாசநாதர் சதகம் என்னும் நூல் எழுதியுள்ளார்.

2. 150 ஆண்டுகளுக்கு முன் பழனி மாம்பழக்கவி சிங்க நாவலர் பேளுக்குறிச்சி ஜமீன்தார் வேலப்பன் மேல் பாடியுள்ள 'சந்திர விலாசம்' என்ற நூலில் கைலாசநாதர் மேல் கடவுள் வாழ்த்துப்பாடியுள்ளார்.

3. 1903 ஆம் ஆண்டு ராசிபுரம் நாற்காலி பொன்முடி பொன்னுசாமி செட்டியார் இராசை தோத்திர மஞ்சரி என்ற நூலினை இயற்றியுள்ளார். இங்குள்ள சிவனுக்கு 5 முகங்கள் உண்டு.

1. ஊர்த்துவ முகம் - வடகிழக்கு நோக்கியிருப்பது, எல்லா போகங்களையும் தருவது.

2. தத்புருடமுகம் - கிழக்கு நோக்கியிருப்பது, எல்லா போகங்களையும் தருவது.

3. அகோரமுகம் - தெற்கு நோக்கியிருப்பது, எல்லா பாவங்களையும் போக்குவது.

4. வர்ம தேவ முகம் - மேற்கு நோக்கியிருப்பது பிடரி மேல் நின்று பால் போல் திகழ்வது. ஞானத்தையும், மோட்சத்தையும் கொடுப்பது.

5. சத்யோசத முகம் - வடக்கு நோக்கி இருப்பது தாழ்ந்த பலன்களை தருவது என சிவகாமங்கள் கூறுகின்றன.

சைவக்குறவர்கள் பாடப்பெற்ற 275 தலங்களில் மேற்கு நோக்கி இருப்பவை 34 மேற்கு நோக்கியுள்ள முக்கிய

சிவத்தலங்கள் திருவாணைக்கால், திருக்கடையூர், கண்டியூர், செம்பனார் கோவில், கற்குடி, காளத்திரி, குடந்தை, காரோணம், திருச்செங்கோடு, திருச்சி, திருக்கோவிலூர், மயிலை, வைத்தீஸ்வரன் கோவில், திருமுருகன் பூண்டி என்பனவை.

அறம் வளர்த்த அம்பினை அன்னபூரணி தர்ம சமவர்த்தினி அமைதி தவழும் முகங்கொண்டு ஒருகையில் செங்கோல் பிடித்து இன்னொரு கையில் தன் பாதத்தைக் காட்சி நாமக்கெல்லாம் காட்சி தருகின்றனர். இங்குள்ள மண்டபத்தில் நான்கு புறமுள்ள தூண்களில் அழகிய சிற்ப வேலைபாடுகளுடன் செதுக்கப்பட்டுள்ளது. சித்ரா பௌர்ணமி அன்று தேர்திருவிழாவின் போது இக்கிளி மண்டபத்தில் சிவனுக்கும், அம்பிகைக்கும் திருமணம் நடைபெறும்.

கோவிலின் வெளிபுறம் கைலாசநாதரை பார்த்தவாறு நந்தி அமைந்துள்ளது.

இக்கோவிலில் தட்சிணாமூர்த்தி சன்னதியும் ஸ்ரீ ஐயப்ப சுவாமி விக்கிரமும், சனீஸ்வரரும் இதைப் போன்ற மற்ற பரிவார மூர்த்திகளும் இந்த ஆலயத்தில் அமையப் பெற்றுள்ளன.

**<u>கைலாசநாதர் கோவிலின் சிறப்புக்கள்</u>**

◆ தமிழகத்தில் மேற்கு நோக்கியுள்ள 34 சிவாலயங்களில் இராசிபுரம் கைலாசநாதர் ஆலயமும் ஒன்றாகும். அருணகிரிநாதரால் பாடப்பட்ட 216 தலங்களில் இதுவும் ஒன்றாகும்.

◆ கடையெழு வள்ளல்களில் ஒருவனான வல்வில் ஓரி வழப்பட்ட தலமாகும்.

◆ சிற்பக் கலையழகுடன் கூடிய பெரிய நந்தி இக்கோவிலில் உள்ளது.

◆ தமிழகத்தில் ஒரே கல்லால் செதுக்கப்பட்ட உயரமான ஆறுமுக பெருமான் இங்குள்ளார்.

- ஒரே ஆலயத்தில்அம்மன், சிவன், முருகன் ஆகிய சந்நிதிகள் இருப்பது ராசிபுரத்திலும், விருத்தாச்சலத்திலும் மட்டுமே. தமிழகத்தில் பஞ்சலிங்க மூர்த்திகளுக்கு தனிதனிச் சந்நிதிகள் இவ்வூரில் மட்டுமே உள்ளது.

- சிறப்பு சிற்பங்கள் உடைய சிற்ப தூண்களும் இங்கு உண்டு.

# ஏத்தாப்பூர் சாம்பமூர்த்தீஸ்வரர்

ஏத்தாப்பூர் ஆத்தூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள சாம்ப மூர்த்தீஸ்வரர் திருக்கோவில் வசிட்ட நதிக்கரையில் அமைந்துள்ள இரண்டாவது சிவத்தலமாகும்.

இவ்வூர் முன்பு 'ஸ்ரீ ராம சமுத்திரம்' என்று வழங்கப்பட்டு பின்னர் ஏத்தாப்பூர் என்று வழங்கப்பட்டிருக்கிறது. இவ்வூர் சிவத்தலத்திலுள்ள மூலவர் சாம்மூர்த்தி ஈஸ்வரர் என்றும், அம்பாள் மானோன்மணி என்றும் அழைக்கப்படுகிறாள்.

சாம் சிவ மூர்த்தி லிங்க வடிவில் அருள் பாலிக்கிறார். இது அப்பு லிங்கத்தலமாகும்.

ஒருமுறை மைசூர் மகாராஜாவின் ஆட்சியின் போது, மகாராஜா தனது மந்திரியை அழைத்து ஏத்தாப்பூரில் சிவன் கோவில் கட்டச் சொன்னாராம். அவ்வாறு கோவில் கட்டும் போது அருகே குளத்தில் திருமால் கோவிலுக்கு தேவையான விக்ரகங்கள் கிடைத்த திருமால் கோவிலும் கட்டி விட்டராம்.

இதனால் மன்னர் நம்மை தண்டிப்பார் எனக்கருதி மந்திரிராவ் என்பவர் வாழப்பாடி அருகே ஓர் இடத்தில் ஒளிந்துக் கொண்டாராம். பின்னர் மைசூர் ராஜா கோவிலைப் பார்த்துவிட்டு, மந்திரியை ராஜமரியாதையோடு அழைத்து வந்து அவரை பாராட்டி வாழ்த்தியதாக செவி வழி செய்திகள் கூறுகின்றன.

கோவிலில் 50 அடி உயரத்தில் துவஸ்தம்பமும், சின்ன அளவில் கோபுரமும் கட்டப்பட்டிருக்கிறது. கோவில் அர்த்தமண்டபம், மகா மண்டபம், கருவறை என மூன்று பிரகாரங்களோடு அமைக்கப்பட்டிருக்கிறது.

கருவறைச் சுற்றுக்களில் அமைந்துள்ள தேவக் கோட்டங்களில் முறையே கணபதி, தட்சிணாமூர்த்தி, பிரமன், துர்க்கை, முருகப் பெருமான் ஆகியோர் காணப்படுகிறார்கள்.

அஷ்டதிக்குப் பாலகர், பைரவர், 63 நாயன்மார்களின் கற்சிலைகளும் இங்குக் காணப்படுகின்றன. இங்கு உள்ள முருகன் வள்ளி, தெய்வானையோடு காட்சித் தருகிறார். இக்கோவிலின் மடப்பள்ளி அருகே தென் மூலையில் நான்கு லிங்கம் உள்ளது. இதற்கு 'சதுர்வேதி லிங்கம்' என்று பெயர். கருவறையில் பின்புறம் பத்து லிங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கோவிலின் இரண்டாம் சுற்றுத்தூணில் வீரபத்ரன் சிலை ஒன்று வடிக்கப்பட்டுள்ளது. இச்சுற்றின் வடமூலையில் நெற்களஞ்சியம் ஒன்றும், சபா மண்டபத்தில் யாக சாலையும் அமைக்கப்பட்டுள்ளது.

இக்கோவிலின் தல விருட்சம் வில்வ மரம் சாமி வீதி உலா வர, யானை, கருட, குதிரை, மயில், நாகம், ஆஞ்சநேயர் வாகனங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

சாம்ப சிவமூர்த்தி கிழக்கு நோக்கியும், மனோன் மணி தாயார் தெற்கு நோக்கியும் காட்சியளிக்கிறார்கள்.

தமிழகத்தில் எங்குமில்லா சிறப்பு இந்த கோவிலுக்கு உண்டு. வருடத்தில் 15 நாட்கள் சூரிய உதய நேரத்தில் சூரிய கதிர்கள் கர்ப்பக்கிரகத்தில் இருக்கும் சிவன் நெற்றியில் விழுகிறது. ஐப்பசி மாதம் 9 ஆம் தேதி முதல் 15 ம் தேதி வரையிலும், மாசிமாதம் 1 ந் தேதியிலிருந்து 7 ம் தேதி வரையும் இந்த அதிசியக் காட்சியைக் காணலாம்.

20 ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற தேர்திருவிழா, முக்கிய விஷேடங்கள் இப்போது இங்கு நடைபெறுவதில்லை.

# ஆறகளூர் காமநாதீஸ்வரர்

**வ**சிட்ட நதிக்கரையில் அமைந்துள்ள நான்காவது தலம் ஆறுகளூர் காமநாதீஸ்வரர் திருக்கோவில் வாயுலிங்கத்தலம். இறைவன் லிங்க வடிவில் காட்சித்தருகிறார். இறைவன் காமநாதேஸ்வரர் இறைவி பெரியநாயகி.

ஆறகளூர் முன்பு 'ஆறை' நகர் என வழங்கப்பட்டிருந்தது. முன்னர் ஆறுகளூரில் கோட்டைகளும், அகழிகளும் இருந்திருக்கின்றது. இவ்வூரில் ஆறு அகழிகள் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்திருந்தால் 'ஆறகளூர்' எனப்பெயர் பெற்றதாக கூறுவர். ஆறும் (நதியும்) அகழியும் உள்ள ஊர் 'ஆறகளூர்' எனப் பெற்றதாகவும் கருதலாம்.

மன்மதன் சிவபெருமானால் நெற்றிக்கண்ணால் எரிக்கப்படுவதற்கு முன்னால் தேவர்களின் உருவைப் பெற்றிருந்தான். தேவர்கள் உருவத்துடனே காமன் இத்தலத்திலுள்ள இறைவனை வழிப்பட்டதால் 'காமநாதீஸ்வரர்' எனப் பெயர் பெற்றார்.

இக்கோவிலின் கோபுரம் மிகப் பழமையாக இருந்தாலும் உயர்ந்து காட்சியளிக்கிறது. கோவிலின் கருவறை சதுரவடிவமானது. கருவறைக்கு முன் அர்த்த மண்டபம், மகா மண்டபம் அமைந்துள்ளது. கருவறைச்சுற்றுக்களில் அமைந்துள்ள ஐந்து தேவக் கோட்டங்களில் முறையே கணபதி, தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், பிரம்மன், துர்க்கை ஆகியோர் காணப்படுகின்றனர்.

• சண்டிகேஸ்வரர், முருகன் போன்ற தெய்வங்கள் இரண்டாவது சுற்றில் அமைந்துள்ளன. அதிலே அட்டதிக்கு பைரவர்கள் சிலைகளும் உள்ளன.

இக்கோவிலில் பிரம்மாவிற்கும், நடராஜருக்கும் தனி சந்நிதிகள் உண்டு. கோவிலின் வடபக்கம் 63 நாயன்மார்களின் சிலைகளும் காணப்படுகின்றன. கோவிலின் தல விருட்சம் மகிழ மரமாகும்.

ஒவ்வொரு ஆண்டும் பங்குனி உத்திரத் திருவிழாவில் பூர நட்சத்திரம் அன்று காலை 6 மணி முதல் 7 மணிக்குள் ஸ்ரீ காமநாதீஸ்வரர் மேல் சூரிய பகவான் தன் ஒளிக்கதிர்களால் வணங்குவதை காணலாம். இத்தலத்து இறைவனை திருமால், பிரம்மன், சூரியன் ஆகியோர் வணங்கியதாக காமநாதர் கோவைப் பாடல் குறிப்பிடுகின்றது.

ஆறகளூர் காமநாதீஸ்வரர் கோவிலில் தின பூஜைகள் தவிர மாதந்தோறும் உற்சவங்கள் நடைபெறுகிறது. ஆருத்ரா தரிசனம், சிவராத்திரி பூஜையும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. ஐப்பசி 'கௌரி நோன்பு' விஷேசம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோவிலில் இருந்து கி.பி. 1913 ல் 27 கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவை சோழர் காலம் 14, பாண்டியர் காலம் 5, நாயக்கர் காலம் 13 கல்வெட்டுக்கள் ஆகும்.

**மூன்றாம் குலோத்துங்கன்.**

மூன்றாம் குலோத்துங்கனின் 13-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் இரண்டு மண்டபத்தின் வடக்குச் சுவரில் காணப்படுகின்றன. இராசராச தேவன் பொன் பரப்பினான். குலோத்துங்கசோழ வாணவ கோவரையனும், கீழையூர் மலையமானும் செய்துக். கொண்ட உடன்படிக்கை தங்கள் பாதுகாப்பில் உள்ள நாட்டு எல்லையை வரையறுத்துக் கொண்டு தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வதில்லை என்றும், பகைவர்களை நாட்டில் நுழையவிடாமல் அரசனுக்கு உறுதுணையாக இருக்க வேண்டுமென கூறுகிறது.

மற்றொன்று (1) அம்மையப்பன், அழகிய சோழன், எதிரிலி சோழக் சம்புவராயன் (2) குலோத்துங்க சோழ வாண கோவரையன் (3) மைத்துணன் காடவராயன் ஆகிய மூவரும் தங்களுக்குள் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டார்கள்

என்றும் குலோத்துங்கனுக்கு உறுதுணையாக இருந்து பகைவர்களை முறியடிக்க வேண்டும் என குறிப்பிடுகிறது.

இந்த நான்கு கல்வெட்டுக்கள்மூலரும் குலோத்துங்க சோழ வாண கோவரையன் மலையமான், சம்பவராயன், காடவராயன் என்ற நான்கு தலைவர்கள் பற்றியும் அறிய முடிகிறது.

கிளியூர் மலையமான் என்பவன் குலோத்துங்களின் படைத்தலைவர்களுள் ஒருவன் இவன் மலையமான் மரபை சார்ந்தவன். இவன்குலோத்துங்கன் மீது அன்பு கொண்டு விளங்கியதை கல்வெட்டுகள் மூலம் அறியலாம்.

மூன்றாம் இராசாராச சோழன் (கி.பி. 1216-1256) இவனது நான்காம் ஆட்சியாண்டு கல்வெட்டுப்படி (கி,பி.1220) நரித்தலை நாவலூர் என்ற கிராமத்தை இக்கோவிலுக்கு வழங்கினான் எனக்குறிப்பிடுகிறது.

14 ம் ஆட்சியாண்டு கல்வெட்டு (கி.பி. 1220) இக்கோவிலில் நான் வழிபாட்டிற்கு விளக்கெரிக்கவும், பரிமாரிக்கவும் நாச்சியர் 15,000 காசுகள் வழங்கியதை குறிக்கும்.

நுழைவாயிலின் வலப்புறம் உள்ள ஒரு கல்வெட்டு, இக்கோவிலுக்கு 8 விளக்குகள் எரிக்க 2000 காசுகளும், 49 பசுக்களும் வழங்கிய செய்தியைக் கூறும்.

## சுந்தரபாண்டியன் காலம் (கி.பி. 1251-1271)

சுந்தர பாண்டியனின் 10வது ஆட்சியாண்டு கல்வெட்டு (கி.பி. 1261) பொன்பரப்பி ராசநாராயண நல்லூரில் அரைவேலி நிலம் இக்கோவிலுக்கு தேவதானமாக வழங்கப்பட்டதை கூறுகிறது. இத்தானத்தை ஆதித்தன் கணபதி ஆள்வான் என்பவன் வழங்கியுள்ளான்.

சுந்தரபாண்டியனின் 12-ம் ஆட்சியாண்டு கல்வெட்டு (கி.பி.1263) ஒன்று, அக்கோவிலில் மாதத்தில் 31/8 நாட்கள் வழிபாடு நடத்தும் உரிமை ஒரு பெண்ணுக்கு இருந்தது. அப்போது கோவிலுக்கு உரிமையான நகைகள் சிலவற்றை

பொய்க் கணக்குக்காட்டி விற்றுவிட்டாள். இதனையறிந்த கோவில் அதிகாரிகள் அவளை கைது செய்து விசாரித்தனர். மேலும் அவளும், அவளது மருமகளையும் சிறையலிட்டனர் எனக் குறிப்பிடுகிறது.

மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலம் (கி.பி. 1276-1293).

கரூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட இவனது 13 ம் ஆட்சியாண்டில் வெட்டிய கல்வெட்டு கோவில் நடைமுறையில் மக்களுக்கு உரிய பங்கைப்பற்றி விரிவாகப் பேசுகிறது.

ஆறகளூர் செக்கர்க்கும், செட்டியார்க்கும் கோவில் பொறுப்பின் தலைமைக்காக நடந்த தகராறில் கோவில் நடைமுறை செக்கார்க்கு ஒப்படைக்கப்பட்டது. சில ஆண்டுகளில கோவில் நிர்வாகம் சீர்குலையவே இவ்வூர் மக்கள் சேர்ந்து தளவாய் என்ற ஊரை இக்கோவிலுக்கு எழுதி வைத்து அதன் வருவாயைக் கொண்டு கோவிலை பராமரித்தனர். இச்செய்தி கோவிலின் வடசுவரில் உள்ளது.

பாண்டியன் இரண்டாம் சடையவர்மன் சுந்தரன் (கி.பி.1292) கல்வெட்டில், வேதம் ஓதுவதற்கு இக்கோவிலுக்கு அந்தணர்கள் சேதிராயர் என்பவரால் நியமிக்கப் பெற்றார். அவர்களுக்கு குலசேகரன் பெரிய ஏரியில் காடுவெட்டித் திருத்திய ஆயிரம் குழி நிலம் இறையலியாக வழங்கப் பெற்றது.

# சின்னதிருப்பதி பெருமாள்

**சே**லம் அஸ்தம்பட்டியிருந்து கன்னங்குறிச்சி செல்லும் சாலையில் ஊரின் கிழக்கு புறம் செல்லும் சாலையில் சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. சின்னதிருப்பதி வெங்கடேசப் பெருமாள் கோவில்.

இக்கோவில் அமைந்திருக்கும் குன்றின் மேல் முற்காலத்தில் பாம்பு புற்று ஒன்று இருந்தது. திருமலை திருப்பதியில் போலவே, அப்பகுதியில் மேயும் மாடுகள் அனைத்தும் இப்புற்றின் மேல் பால் சுரந்து சென்றன.

இதனைக் கண்ட பக்தர் ஒருவர் புற்றுக்கு பக்கத்தில் கிடைத்த சிலையே திருமஞ்சனம் சாத்தி வணங்கி வந்தார். இன்றும் இக்கோவிலில் மாடுகள் பால் சுரந்த புற்றையே பக்தர்கள் வணங்கி வருகிறார்கள்.



இத்தலத்து இறைவன் பெருமாள் பக்தர் ஒருவர் கனவில் தோன்றி, 'யான் இருக்கும் இந்த குன்றில் ஒரு துளசி மாடம் கட்டுக' எனக்கூற, அப்பெரியவர் ஊராரிடம் தகவல் சொல்லி துளசிமாடம் கட்ட ஏற்பாடுகள் செய்த போது, வெளிர்நிற மண்ணும் அதனுள்ளே ஒருசிலையும் அகப்பட்டது.

‘‘அதுவே இன்றும் அருள்தரும் வெங்கடேச பெருமாளாக போற்றி வணங்கப்பட்டு வருகிறது.

இத்திருக்கோவிலின் மூலவர் அருள்மிகு வெங்கடேசப் பெருமாள்,

ஸ்ரீ தேவி, பூதேவி உள்ள திருக்கோவிலின் கற்ப கிரகத்தை பள்ளிக் கொண்ட பெருமாள், நம்மாழ்வார், ஆண்டாள், ராமர், சீதை லட்சுமணன் சந்நிதிகள் உள்ளன.

இக்கோவில் உள்ளே இருக்கும் புற்று மண்ணை எடுத்து உபயோகித்தால் குழந்தை பாக்கியம் இல்லாதவர்களுக்கு மகப்பேறு உண்டாகும். இக்கோவிலில் கற்சிலைகளாலான துவார பாலகர்கள், கருடன், கிருஷ்ணர், விஷ்ணுதுர்க்கை, பலிபீடம் மற்றும் ஐம்பொன்னினல் ஆன சக்கரத்தாழ்வார் சிலைகளும் உண்டு.

இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள அருள்மிகு வெங்கடேசப் பெருமாளை வணங்கி வழிப்படுவோருக்கு எல்லா வளமும் நலமும் அளிப்பதோடு திருமலை திருப்பதியை போலவே இங்கும் அருள்பாலிக்கிறார்.

# அகத்தியர் வழிப்பட்ட ஊத்துமலை முருகன் கோயில்

சேலம் மாநாகரிலிருந்து சுமார் 4 கி.மீ. தொலைவில் சீலநாயக்கன்பட்டி பைபாஸ் அருகே அமைந்துள்ளது, ஊத்துமலை எனப்படும் ஸ்தலமலை முருகன் கோவில் அமைந்துள்ளது. இங்கு சக்திமிகுந்த ஊத்துமலை பாலசுப்ரமணிய சுவாமி எழுந்தருளியுள்ளார்.

மூலவர் நின்ற திருக்கோலத்தில் கையில் வேலுடன் மயில் வாகனத்துடன் காட்சியளிக்கிறார். இடப்பக்கம் விநாயகரும், வலப்புறம் நந்தியுடன் கூடிய சிவலிங்கமும் உள்ளன.

இம்மலையில் சமணர்கள் வாழ்ந்திருக்க கூடும் என்பதை, இங்குள்ள குகைகள் மூலம் அறியலாம். இங்குள்ள முருகனை அகத்தியர் பூஜித்துள்ளார். அதோடு மிகப்பெருமை வாய்ந்த ஸ்ரீசக்ரா தேவியையும், அங்கு 43 முக்கோணங்கள் கொண்ட சக்தி யந்திரங்களும் உருவாக்கப்பட்டுள்ளது.

சகல சக்திகளையும் உள்ளடக்கியதாக கருதப்படும் ஸ்ரீ சக்கரத்தின் ஒரு பக்கம் ஒரு குடிலும், அதன்கீழ் ரிஷி பத்தினி ஒருவர் தவக்கோலத்தில் இருக்கிறார். ஸ்ரீ சக்கரத்தின் அடுத்தப்பக்கம் புலித்தோல் மீது அகத்தியர் ஒரு மரத்தடியில் அமர்ந்த நிலையில் உள்ளார்.

முருகன் கோவிலுக்கு எதிரில் கபிலர் குகை அமைந்துள்ளது. இக்குகையில் கபிலர் தவக்கோலத்திலிருப்பது புடைப்பு சிற்பமாய் சித்தரிக்கப்பட்டுள்ளது. அவர் அருகே மரம், பசு, சூலாயுதம் போன்றவை காட்டப்பட்டுள்ளது.

சிவராத்திரி தினங்களில் அதிகாலை அமாவாசை பிறக்கும் சமயத்தில் சப்த ரிஷிகளும் அங்குள்ள சுணை தீர்தத்தங்களில் ஸ்நானம் செய்துவிட்டு, ஸ்ரீ சதாசிவ மூர்த்திக்கு 'சப்தரிஷி' பூஜை செய்துள்ளனர்.

சிவசித்தர், கஞ்சமலை சித்தர், கரடி சித்தர், பழனிபோகர் ஆகியோர் இங்கு வாசம் செய்ததை கொங்கு மண்டல சதகமும், பாபநாச புராண ஓலைச்சுவடியும் குறிப்பிடுகிறது. கிளி வடிவில் சுகரிஷியும், கன்வ ரிஷியும் இங்கு தவம் செய்தும், நீராடியும் பெருமை சேர்ந்துள்ளனர்.

இங்கு ஸ்ரீ சுவர்ண விநாயகரும், அகஸ்த்தீஸ்வரர் சதாசிவர், நவக்கிரக மூர்த்திகள் சமீப காலத்தில் உருவாக்கப்பட்டவை. இங்கு தல விருட்சம் வில்வம் ஆகும். இத்தலத்திற்கு வந்து வழிபடுவோருக்கு அஷ்ட ஐஸ்வர்யமும், தொழில் வளமும், வியாபார மேன்மையும் உண்டாகும்.

பால முகங்கொண்டு வேலும், மயிலும் கொண்டு அன்பர்க்கு அன்பனாய், பக்தர்களின் வினைதீர்ப்பவனாய், அன்பர்களின் மனதில் ஆறுதலை வழங்கும் அன்புத்தமிழ் கடவுளாய் அருள்பாலிக்கும் பால சுப்ரமணியரையும், அகிலாண்ட கோடி, பிருமாண்ட நாயகியான ஆதி சக்தி, மகா சக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி என சர்வ லோக நாயகியான பால திரிபுர சுந்தரி ஸ்ரீ சக்ரா - தேவியையும் வணங்கினால் வாழ்வில் நலம் பெறலாம்.

# பீமன் வழிப்பட்ட பீமேஸ்வரர் ஆலயம்

**ப**ஞ்ச பாண்டவர்களில் ஒருவரான பீமன், இத்திருத்தலத்திலுள்ள லிங்கத்தை பிரதிஷ்டை செய்து வழிப்பட்டதால், இத்திருக்கோவிலுக்கு 'பீமேஸ்வரர்' எனப்பெயர் பெற்றது.

இந்த கோவில் திருமணி முத்தாற்றங்கரையில் நான்காவது கோவிலாக அமைந்துள்ளது. பஞ்ச பாண்டவர்கள் காலத்தில் அஸ்தினாபுரத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் தண்ணீர், உணவு இல்லாமல் பஞ்சம் ஏற்பட்டு மிகவும் கஷ்டத்திற்கு ஆளானார்கள்.

இப்பஞ்சத்தை தீர்க்க என்ன வழி என்று அரச குருவிடம் கேட்ட போது அசரீரி மூலம், தகவல் வந்தது. பஞ்ச பாண்டவர்கள் அனைவரும் வடதிசை நோக்கி செல்ல வேண்டும். அங்க ஒரு வனத்தில் மிருகம் ஒன்று உள்ளது. அது மிக சக்தி வாய்ந்த சிவன் அருள் பெற்றது. அதனை பிடித்து வந்தால் கடும்பஞ்சம் நாட்டில் தீரும் என்றது.



இதனை கேட்ட பஞ்ச பாண்டவர்கள் வடதிசை நோக்கி அந்த மிருகத்தை பிடித்து வர சென்றனர். அம்மிருகத்தை பிடிக்க சென்ற போது, இவர்களை கடுமையான தாக்கியது. இவர்கள்

பயந்து திருமணி முத்தாற்றங்கரையின் ஓரமான ஓடி வரும் போது, தருமர் ஒரு லிங்கம் செய்து வழிப்பட்டார். அந்த மிருகம், லிங்கத்தை கண்டதும், சிவ பக்தியால் சிவ லிங்கத்தை சுற்றி வந்தது.

இதனால் அந்த மிருகத்திடமிருந்து தப்பிக்க, திருமணி முத்தாற்றங்கரையில் ஒன்றன் பின் ஒன்றாக லிங்கம் பிரதிஷ்டை செய்து வழிப்பட்டனர். அந்த மிருகமும் ஒவ்வொரு லிங்கமாய் சுற்றி வந்து கோபம் தணிந்தது.

எனவே, மாவுரெட்டி ஊரில் உள்ள லிங்கம் பீமனால் பிரதிஷ்டை செய்து வழிப்பட்டதால், இத்திருக்கோவிலுக்கு பீமேஸ்வரர் என்று பெயர்.

திருமணிமுத்தாறு சேலத்தில் உருவாகி, பரமத்திவேலூர் நஞ்சை இடையாறு கிராமத்தில் காவிரியோடு சேர்கிறது.

இந்த ஆற்றங்கரையில் சுகவனேஸ்வரர் (சேலம்), கரபுரநாதர் (உத்தம சோழபுரம்), வீரட்டீஸ்வரர் (பில்லூர்) பீமேஸ்வரன் (மாவு ரெட்டி), திருவேனீஸ்வரர் (நஞ்சை இடையாறு) ஆகிய ஐந்து திருத்தலங்களும் பஞ்ச பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டவை. இந்த ஐந்து கோவில்களையும் ஒரே நாளில் வழிப்பட்டால் அனைத்து பாவங்களும் நீங்கி முக்தி பெறுவார்கள் என்பது ஐதீகம்.

இவ்வாலயத்தில் சண்டிகேஸ்வரர், முருகன், விநாயகர், தட்சிணாமூர்ததி, கால பைரவர், சனீஸ்வரர், பிரம்மா, நவக்கிரக சந்நிதிகள் தனித்தனியே உண்டு.

**இக்கோவில் சேலத்திலிருந்து பரமத்தி வேலூர் செல்லும் சாலையில் 50 கி. மீ தொலைவில் உள்ளது. மாவுரெட்டி பீமேஸ்வரர் திருக்கோவில்.**

# அத்தனூர் அம்மன் கோவில்

**அ**த்தனூர் அம்மன் கோவில் சேலத்திலிருந்து 17 வது கிலோ மீட்டர் தொலைவில் திருச்சி மெயின் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இது மஞ்சள் கல்மலை அடிவாரத்திலுள்ளது.

அத்தனூர் என்பதற்கு பெயர்க் காரணம், 'அத்தன்' என்றால் 'சிவன்' அத்தன் (சிவன்) விரும்பிய ஊர் அத்தனூர் என்றாயிற்று. அத்தனூரை சுற்றி மல்லூர், தேங்கல்பாளையம், பழந்தின்னிப்பட்டி, மாட்டுவேலாம்பட்டி, ஆயிபாளையம் என்ற பல ஊர்களுக்கு மையமாக அத்தனை ஊர்களையும் கொண்டதால் அத்தனூர் பெயர் வந்ததாகவும் கூறுவர்.

முற்காலத்தில் பஞ்சம், பட்டினி என்று வந்துவிட்டால் அந்த இடத்தைவிட்டு வளமிக்க இடம் தேடி வருவது வழக்கம். இப்படி ஒரு கூட்டத்தினர் இடம் பெயர்ந்தனர். அப்பொழுது ஒரு பெண் வைத்திருந்த கூடையில் ஒர குழவிக்கல் இருப்பதை அவள் கணவன்கண்டான். இது என்ன கல்லோ என்று எடுத்து வீசி எறிந்து விட்டு, அடுத்த ஊரில் வந்து தங்கினார்கள்.

மீண்டும் அந்த குழவிக்கல் கூடையில் இருந்தது. நேற்று வெளியே எறிந்தக்கல் எப்படி திரும்பவும் வந்தது என்று ஐயத்தோடு மீண்டும் வெளியே தூக்கிப் போட்டு விட்டு, கடைசியாக அத்தனூர் மலையடி வாரத்தில் தன்கூட்டத்தோடு தங்கினார்கள்.

இரவில் அந்தக்கூட்ட தலைவன் கனவில் "தான் அவனுடைய குல தெய்வம் என்றும், என்னை மட்டும் நீங்கள் ஏன் ? தனியாக விட்டுட்டு வந்து விட்டீர்கள்" எனக்கூறி மறைந்தது. காலையில் தன் கூட்டத்தாரிடம் நடந்தவற்றைக்கூறி, அக்கல்லை நட்டு தனது குல தெய்வமாக வணங்க ஆரம்பத்தினர். பின்னர் கோவில் சிறியளவில் கட்டி வழிபடத் துவங்கினர்.

அதுவே இப்போது ஆதிமூலவராகும். பின்பு, பத்ரகாளியம்மன் நிறுவப்பட்டது. தற்போது அத்தனூர் அம்மன்

என்று அழைப்பது 'சூரசம் ஹார வர்த்தினி' என்ற பத்ரகாளி அம்மனாகும்.

பங்குனி மாத தேர் திருவிழாவின் போது எருமை கடா பலி கொடுப்பார்கள் மூன்று எருமை கடாக்களை நிற்க வைத்து ஒரே வெட்டாய் வெட்டி அருகேயுள்ள குழியில் போட்டு ஆளுக்கொரு கல்லாய் போட்டு கற்களாலே குழியை நிரப்புவர். இது இங்கு நிகழும் வித்தியாசமான பலியீட்டு முறையாகும்.

இக்கோயில், வல்வில் ஓர் வழிப்பட்ட தலம். ஊமை, செவிடு போக்கு சக்தியுடையது. மலடு, மகப்பேறு தீராத வியாதிகளை வைக்கும் மகாசக்தி, பேய், பிசாசுகளை நீக்கும் தெய்வம், கால்நடைகளுக்கு ஓர் நோய் என்றால் கண் கொண்டு போக்கும் மகா காளி.

அத்தனூர் அம்மன் என்ற பெயரில் மோடமங்கலம், கருமாபுரம், வட்டூர் கூத்தன்பூண்டி, தேவனாங்குறிச்சி, கடலூர், பிடாரியூர், கொன்னையாறு, காகம் ஆகிய ஊர்களில் கோவில்கள் உள்ளன.

இக்கோயிலுக்கு வெளியே 'உரும்பிக்காரன்' நடுகல்லும், கோவிலுனுள் தன் தலையைத் தானே அறுத்துக் கொள்ளும் நவ கண்ட சிற்பங்களும் உண்டு. இக்கோவில் வல்வில் ஓரி வழிப்பட்டதாகவும் நம்புகிறார்கள். இங்குள்ள சிதைந்த கல்வெட்டு மூலம் சஞ்சீவராய பெருமாளுக்கும், அம்மனுக்கும் மானியங்கள் விட்ட தகவல் அறிய முடிகிறது.

# சேலம் அருள்மிகு சுகவனேசுவரர் சுவாமி திருக்கோவில்

கிரேதாயுகத்தில் தேவர்களுடைய பாவத்தைப் போக்கியாதால் இத்தலத்திற்குப் பாபநாசம் என்றும் எம்பெருமானுக்கு பாபநாசர் என்றும் திரேதாயுகத்தில் காமதேனுப் பசு வழிப்பட்டதால் தலத்திற்குப் பட்டீச்சுரர் என்றும், துவாபரயுகத்தில் ஆதிசேடன் பசித்து வழிப்பட்டதால் தலத்திற்கு நாகபுரி என்றும், கலியுகத்தில் கிளி உருவங்கொண்டமுனிவர் பூசித்து வழிப்பட்டதால் தலத்திற்கு சுகவனம் என்றும் எம் பெருமானுக்கு சுகவனேசர் என்றும் திருப்பெயர்கள் வழங்கலாயின.

எனவே இத்தலத்திற்குப் பாபநாசம், பட்டீச்சுரம், நாகீச்சுரம் கிள்ளைவனம் சுகவனம், சுகராண்யம், என்ற பெயர்களும் விளங்குகின்றது. தஞ்சை மாவட்டத்தில் உள்ள பாபநாசம், பட்டீச்சுரம், நாகேஸ்வரம் என்னும் பெயர்களையுடைய திருத்தலங்கள் வேறானவை. இத்தலத்தின் பெயர்க் காரணமாகச் சில செய்திகள் விளங்கி வருகின்றன. இத்தலத்தில் 4 வேதங்கள் முதலான தேவர்கள் இறைவனை வழிப்பட்டதால் சதுர்வேதிமங்கலம் என்னும் பெயர் பெற்றது. சேலம் நகரின் நடுவில் இத்தலம் அமைந்துள்ளது. சுற்றிலும் பல மலைகள் உடையது. மூர்த்தி, தலம் தீர்த்தம், மூன்றிலும் சிறப்புடையது. சாபம் பெற்ற சுக முனிவர் கிளியுருவங்கொண்டு இறைவனை வழிப்பட்டது. கிளி முகங்கொண்ட சுகமுனிவரின் மூலவர் உற்சவமூர்த்தியும் உள்ளது. இதனாலேயே சுகவனம் என்றும், சுகவனேசுவரர் என்றும் அழைக்கப்படுகின்றனர். சேர, சோழ, பாண்டியர் மூவரும் சேர்ந்து நகரை அமைத்து வழிப்பட்டதால், மும் முடித்தலைவாயில் என்றும் பெயர் பெற்றது. மணிமுத்தாறு நதி பல தீர்த்தங்களையும் கொண்டது. மூலவர் சுயம்புலிங்கம் வேடனால் வெட்டப்பட்ட வெட்டுக் காயம் உள்ளது.

மேலும் தேவர்கள் பெருமானை அரசமர வடிவத்தில் வழிப்பட்டது. தேவர்களுடைய பாவங்களைப் போக்கியது.

காமதேனுப்பசு வழிப்பட்டது சேரமானுக்கும் ஆதி சேடனுக்கும் தாண்டவ தரிசனம் காட்டியது துன்மார்க்கத்தில் ஒழுகிய சரஸ்வதிக்கும் சிவ லோகம் கிடைத்தது. கலிங்க தேசத்து மன்னர் ஹேமாங்கதனுக்கு அவன் மீண்டும் ராஜ்யத்தைப் பெறும்படி பெருமாள் அருள் செய்தது ஔவையார் வளர்ப்புப் பெண்ணுக்குத் திருமணம் செய்வித்தது மூவரசர் வேண்டுகோளின்படி மூன்று பனந்துண்டங்களை மரமாக்கிய பழங்களை உண்டாக்கியது ஆகிய சிறப்புகளையுடையதாக இத்தலம் உள்ளது. சேர சோழ பாண்டியர்கள் வழிப்பட்டதால் சேரபுரி உத்தம சோழபுரம் வீரபாண்டி என்னும் பெயர்களில் பல தலங்கள் ஏற்பட்டன.

சேரமான் சுந்தரமூர்த்தி நாயனாருடன் சேர்ந்து திருக்கயிலாயம் சென்றதை ஔவையார் அறிந்து மூன்று பனம் பலத்தை வைத்து வலம்புரி விநாயகரைப் பிராத்திக்க விநாயகரும் தமது துதிக்கையில் ஔவையாரை ஏந்திக் கையிலையில் அமர்த்திய பெருமையுடையது. மனுசாரணன் பழி நீங்கி அருள் பெற்றது. தீக்குளித்த காளந்தி என்பவனை மீண்டும் உயிர் பெற்று வரச் செய்தது. முத்து வளரும் சிறப்புடையது. நகரம் பல்வேறு மன்னர்களால் பல்லவர் சாளுக்கியர், சேர, சோழ, பாண்டியர்கள் நாயக்க மன்னர் மைசூர் அரசர் முதலியோருடைய ஆட்சியில் இருந்து வந்திருக்கிறது. ஓம் என்னும் வடிவில் இவ்வாலாயம் அமைந்துள்ளது. இலக்கிய சார்பில் இத்தலத்தைப் பற்றிய ஓர் புராணம் பாவநாசத் தல புராணம் உள்ளது. அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ் பாடலும் பிற்காலத்தில் பாடப்பெற்ற பல வகைத் துதிப் பாடல்களும் உள்ளன. சுந்தர மூர்த்தி நாயனார் இத்தலத்திற்கு வந்து பதிகம் பாடியதாகச் சொல்லப்படுகிறது.

# ஆத்தூர் காயநிர்மலேஸ்வரர்

**ஆ**த்தூர் சேலத்திலிருந்து சுமார் 52 கி.மீ தொலைவில் உள்ளது. பஸ் நிலையத்தை ஒட்டியுள்ள பழமையான கோட்டையினுள் தான் காயநிர்மலேஸ்வரர் கோவில் உள்ளது.

ஆத்தூர் முன்பு வசிட்ட நதி ஊரின் நடுவே பாய்ந்து ஓடியதன் காரணமாக 'ஆற்றூர்' என்றும், கங்கர் காலத்தில் 'அனந்தகிரி' எனவும், பரகேசரி ஆட்சிக்காலத்தில் 'ஆற்றூர்' எனவும் இவ்வூர் வழங்கப்பட்டிருக்கிறது.

ஆத்தூர் காய நிர்மலேஸ்வரர் கோவில் வசிட்ட நதிக்கரையில் அமைந்துள்ள மூன்றாவது கோவிலாகும். இக்கோவிலுள்ள லிங்கம் தேயுலிங்கமாகும் (தீ- லிங்கம்) மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறப்புடைய இத்தலத்திலுள்ள சிவனை வசிட்டரால் முன்பு பூஜிக்கப்பட்டதால் 'வசிட்டேஸ்வரர்' என்ற பெயரும் உண்டு.

இவ்வூரை அனந்தன் என்னும் அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அப்போது அவன் பெயராலே இறைவனுக்கு 'ஆனந்தேஸ்வரர்' என்று பெயர் வழங்கலாயிற்று. இவ்வூருக்கும் அனந்தகிரி எனும் கல்வெட்டு இருந்ததாகச் செய்திகள் கூறுகின்றன. கி.பி. 905-945 வரை தஞ்சையை ஆண்ட முதல் பராந்தகன் என்பவன் இந்த ஆலயத்தின் கர்ப்பகிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவைகளை பழுதுப் பார்த்து மிகப்பெரிய அளவில் திருப்பணிகள் செய்து இருக்கிறான்.

ஆத்தூர் முதல் தலைவாசல் வரை மைசூர் மன்னரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த போது, மைசூர் மன்னரின் பிரதிநிதியாக கெட்டி முதலி என்பவர் இப்பகுதியில் தங்கியிருந்து மக்களிடம் வரிவசூல் செய்து மன்னருக்கு அளித்து வந்தார். ஒரு நாள் அவரது கனவில் இக்கடவுள் காட்சி தந்து அருளியதாகவும், இறைவனது திருமேனியை கனவில் கண்டு வியப்புற்று, கெட்டி முதலியார் சூட்டிய பெயரே 'காயநிர்மலேஸ்வரர்' எனக்கூறப்படுகிறது.

அவர் காலத்தில் தான் ஆத்தூர் கோட்டையின் மதில்சுவர், அகழி, மூன்று நெற்களஞ்சியங்கள், அரண்மனை நீராழி மண்டபம் ஆகியவற்றை மிகுந்த பொருள் செலவில் கட்டினாராம்.

காயம் என்றால் உடம்பு. நிர்மலம் என்பது பரிசுத்தம். பரிசுத்தமான மேனியை பெற்ற மூர்த்தி என்பதற்கு இப்போதும் கூட காய நிர்மலேஸ்வரருக்கு தைலக்காப்பீட்டு கற்பூர ஆரத்தி காட்டும் போது, அவரது மேனியில் கற்பூர ஜோதியின் ஒளி மிக அழகாகத் தெரிவதைக் காணலாம்.

சோழ, சேர, பாண்டிய மன்னர்கள் இப்பகுதியில் வந்து தங்கியதற்கான குறிப்புகளும் நம்மை வியக்க வைக்கின்றன. தலைவாசல் அருகில் மும்முடி என்ற சிற்றூரும், மூன்று முடிகள் போன்ற கருங்கல்லால் ஆன சிலையும் இருப்பதைக் கூறலாம்.

அம்மனுக்கு இங்கு தனி சந்நிதி உண்டு. அன்னை அகிலாண்டேஸ்வரி உருவம் சுமார் நான்கு செப்புத்திருமேனிகள் இக்கோவிலில் காணப்படுகிறது. விநாயகர், சுப்ரமணியர், நடராஜர், நாராயணன், பராசக்தி போன்ற உற்சவ மூர்த்திகளும் இதில் அடங்கும்.

காய நிர்மலேஸ்வரர் ஆலயத்தில் 12 மாதங்களிலும் உற்சவம் நடைபெறுகிறது.

சித்திரையில் வருடப்பிறப்பும், சித்ரா பௌர்ணமியும், வைகாசியில் வைகாசி விசாகமும், ஆனித்திருமஞ்சனமும், ஆடிப்பூரமும், ஆவணியில் விநாயகர் சதுர்த்தியும், புரட்டாசியில் நவராத்திரியும், ஐப்பசியில் அன்னாபிஷேகம், கார்த்திகையில் தீபம், மார்கழியில் சங்கர அபிஷேகமும், தையில் பூசமும், மாசியில் சிவராத்திரி, மாசி மகம், பங்குனி உத்திரமும் சிறப்பாக நடைபெறுகிறது.

கோவிலில் பிரம்மன், துர்க்கை, விநாயகர், தட்சிணாமூர்த்தி, சூரியன், அம்பிகை, சண்டிகேசுவரர், முருகன் முதலிய தெய்வங்களுக்கு தனி சன்னதிகள் உள்ளன.

## இக்கோவிலுள்ள கல்வெட்டுகள்

### முதல் பராந்தகன் (907-953)

காயநிர்மலேஸ்வரர் கோவில் கீழ்த்தளத்தில் சோழன் முதலாம் பராந்தகனின் 14 ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று, பெருமாள், பெருமங்கலமுடையான், காமன் ஆகிய மூன்று கோவில் பணியாட்கள் கொடுத்த நெல்தானம் பற்றி குறிப்பிடுகிறது.

### மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1178- 1218)

கோவிலின் மேற்கு பிரகாரத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று, ஆற்றூர் திருமேற்றளியுடைய நாயனார்க்கு வனநெஞ்சப் பெருமாள் தன் 32 ஆம் ஆட்சியாண்டில் விளக்கு ஏரிக்க 200 குழி நன்செய் நிலத்தை கொடுத்த செய்தியை குறிப்பிடுகிறது.

### கிருஷ்ண தேவராயன் காலம் (கி.பி. 1509 - 1539)

கோவிலின் வடக்குப் பிரகாரத்தில் கிருஷ்ண தேவராயர் காலக்கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அதில் கி.பி. 1509 ல் ஐப்பசி மாதம் 22 ஆம் நாள் 'கல்லி நத்தம்' என்ற ஊரைத்துலத்துக்கண்ண நாயக்கன் இறைவன் ஆறையூர் அருணகிரிநாதரின் மகன் பத்மநாபபட்டன் என்பவனுக்கு கொடுத்தான் எனக்கூறுகிறது.

தெற்கு பிரகாரத்திலுள்ள இன்னொரு கல்வெட்டு ஒன்று கி.பி. 1435 ஆம் ஆண்டு சித்திரை 13 ல் மகதை மண்டலத்தின் தலைவனான அக்கி திம்மைய நாயக்கன் வல்லவராயன் நத்தம் என்ற ஊரை ஆறையூர் அருணகிரிநாதர் குமாரர் ரங்கராசபட்டர் என்பவருக்கு கொடையாக அளித்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பகுதி பின்னர் அக்கொடையாளர் பெயரில் அக்கிதிம்ம நாயக்கர் சதிர்வேதி மங்கலம் எனப் பெயரிடப்பட்டுள்ளது.

## ஆத்தூர்க் கோட்டை :

ஆத்தூர்க்கோட்டை வசிட்ட நதிக் கரையின் வடபுறம் அமைந்துள்ளது. இக்கோட்டையை கெட்டி முதலிகள் (1559-1585) காலத்தில் கட்டப்பட்டதாக கூறுகிறார்கள்.

காய நிர்மலேஸ்வரர் ஆலயத்தில் காணப்படும் முதலாம் பராந்தகச் சோழனின் கல்வெட்டும் (10ம் நூற்றாண்டு) கிருஷ்ண தேவராயன் காலக் கல்வெட்டும் (16 ஆம்நூ) இத்தலத்தின் வரலாற்றுக்கு இன்னும் பழமை சேர்க்கின்றன. சேலம் கிழக்குப் பகுதியை ஆண்டவர்கள் மகதை வாணர்கள். ஆறகளூர் கோட்டையைக் கட்டியவன் சேலம் சின்னநாயக்கன் என்கிறது செக்கிடிப்பட்டி கல்வெட்டு என்றும் ஒரு சிலர் கோட்டையை பழுதுப்பார்த்தது மட்டுமே அவர்கள் பணி என்றும் மறுப்பர்.

ஆத்தூர்க் கோட்டைநீர் அரண்கொண்ட கற்கோட்டை பெருங்கற்களைச் செதுக்கி அடுக்கி கோட்டைச் சுவர் அமைக்கப்பட்டிருக்கிறது. நான்கு நுழைவாயில்கள் இருந்தன. பிரதானவாயில் கிழக்கே இருந்தது. வசிட்ட நதி தெற்கே இயற்கை அரண். மற்ற மூன்று பக்கமும் கருங்கல் கரையோடு அகழிகள் அமைக்கப்பட்டிருந்தன. தெற்கு மதிலின் நடுவே கொடிமதில் இருந்தது.கொடிய முதலைகள் திரிவதற்கு இடமான அகழியும், சுமார் ஒரு மைல் சுற்றளவில் உயர்ந்த நீண்ட மதிலும், பீரங்கி வைக்கத் தோதான மதில் குமிழ்களும், ஒய்வு மண்டபக் குமிழ்களும், அழிந்தும், சிதைந்தும் காணப்படுகின்றன. பகைவர் எளிதில் நுழையாதபடி குறுகிய வாயிலும், அதில் கண் அரை நிலா, தாமரைப் பூக்கள், அரச இலை, முழுநிலா, சிறிய காத்தி, முக்கிளை வேல், மலரின் புறவிதழ் போன்ற பல்வகைக் குறிகளுடன் உள்ளன.

ஆதித்த சோழனின் கலைப்பாங்கைக் கொண்ட சிவன் கோவிலும், பெருமாள் கோவிலும் முனியப்பன் கோவிலும், கொற்றவை கோவிலும் கோட்டைக்கு அணி சேர்க்கின்றன.

கோட்டையின் உட்புறம் பிரமாண்டமான மண்டபம்

உள்ளது. இது பாவலர் பண்ணிசைக்கும் இடமாகவும், ஆடலரங்கமாகவும் இருந்திருக்கிறது. உள்ளே அரசமாளிகை, உல்லாசமாடம், கச்சேரி, தானிய, ஆயுதக்கிடங்கு முதலியன இன்னும் பார்க்க தக்கவனாய் இருக்கிறது.

இப்போது நீண்ட மதிலும், பீரங்கி உள்ள மதிற்குமிழும், பகைவரை தாக்கும் பலவகை பொறிகள் விளங்கும் மதிற்குமிழும், ஒய்வு மண்டபமும் சிதைந்துக் கொண்டிருக்கிருது. பகைவர் எளிதில் உள்ளே நுழைய முடியாதபடி குறுகிய வாயிலும் அமைக்கப்பட்டுள்ளது.

கெட்டி முதலிகளின் வீழ்ச்சிக்குப் பின் இக்கோட்டை ஆர்க்காட்டு நவாப்புக்கு உட்பட்டு பின்னர் ஆங்கிலேயர்கைக்கு வந்தது. கி.பி. 1792 முதல் இக்கோட்டையில் 'சென்னை ராஜ்யதானி'யின் இருபத்தி மூன்றாவது படைப்பிரிவு ஆண்டுகள் தங்கியிருந்தது. 1824 வரையிருந்த இப்படைப்பிரிவு பின்னர் தர்மபுரி மாவட்டத்திலுள்ள ராயக்கோட்டைக்கு மாற்றப்பட்டதால் இக்கோட்டையின் சிறப்பு அழியத் தொடங்கியது. இக்கோட்டை 64 சதுர ஏக்கர் பரப்பளவு கொண்டது.

ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியின் படைத்தலைவன் "ஜான்முர்ரே"என்ற ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியின் படைத்தலைவன் இக்கோட்டையின் முதலாவது படைப்பின் காப்புத் தலைவனாக இருந்து 1799 ஆம் ஆண்டு மே மாதம் 6 ம் நாள் தனது 50 வயதில் காலமாகியிருக்கிறான். தன் வாழ்நாளில் பெரும் பகுதியைப் போர்க்களங்களில் செலவழித்தாலும் அன்பான நட்பான வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தவனாக இவனைப் பற்றிய செய்திகள் கூறுகின்றன. இச்செய்தியை ஜாமுர்ரேயின் மனைவி ஆன்முர்ரே என்பவர் கல்வெட்டில் குறிப்பிட்டு உள்ளார். இச்செய்தி இன்றும் அவரது கல்லறையில் காட்சி தருகிறது.

இங்குள்ள தானியக் களஞ்சியங்களும், அரசவைகளும்,

காவல் மேடைகளும், அழகிய வேலைப்பாடமைந்த கல் மண்டபங்களும் ஆடல்,பாடல் அரங்குகளும் கம்பீரமாக இன்றும் இருக்கின்றன. மடப்பள்ளிகளும் ,அறவோர்மகிழும் அறச்சாலைகளும், மண்டபத்தின் நடுவே அரசனும், அரசியும் தனித்தனியே நீராடும் கண் கவர் நீச்சல் குளங்களும் ஆத்தூர் கோட்டைக்குப் புகழ் சேர்க்கின்றன.

அக்கால கலைப்படைப்பான ஆத்தூர்க் கோட்டையை ஒவ்வொருவரும் கண்டுகளித்து பழமையின் முக்கியத்துவத்தை உணர வேண்டும்.

# பேளூர் தான் தோன்றீஸ்வரர்

சேலம் அறுநூத்துமலை கல்வராயன்மலை இரண்டு மலைகளுக்கு இடையே வசிட்ட நதி உருவாகி மலைக்கிராமங்களை தாண்டி பேளூரில் நுழைகிறது. வசிட்ட முனிவர் இந்த நதிக்கரையில் யாகம் செய்ததால் 'வசிட்ட நதி' எனப்பெயர் பெற்றுது.

வசிட்ட முனிவர் வேள்வி செய்த ஊர் 'வேள்வியூர்'என்று முன்பு பெயர் பெற்றது. பின்பு வேளூர் என்றும் வெளியூர் என்றும் வழங்கி 'பேளூர்'என்றாயிற்று என்பர். வசிட்ட முனிவரால், வசிட்ட முனிவரால் ஐந்து கோவில்கள் ஸ்தாபிக்கப்பட்டது.

1. பேளூர் - பிரிதிலிங்கம் (நிலம்)

2.ஏத்தாப்பூர் - அப்புலிங்கம் (நீர்)

3.ஆத்தூர் - தேயுலிங்கம் (தீ)

4.ஆறகளூர் - வாயுலிங்கம் (காற்று)

5.கூகையூர் - ஆகாயலிங்கம் (ஆகாயம்) ஆகும்.

பேளூர் தான்தோன்றீஸ்வரர் கோவில் வசிட்ட நதிக்கரையில் அமைந்துள்ள ஐந்து தலங்களில் முதல் தலமாகும் இறைவன் சுயம்பு லிங்கமாக காட்சி தந்ததால் 'தான் தோன்றீஸ்வரர்' எனப்பெயர் பெற்றது. இறைவன் பெயர் தான் தோன்றீஸ்வரர், இறைவி அறம் வளர்த்த தாயார்.

பேளூருக்கு அருகாமையில் வசித்து வந்த மாணிக்கம் செட்டியார் என்பவர் மிளகு வியாபாரம் செய்து வந்தார். இதன் காரணமாக இவருக்கு மிளகு செட்டியார் என்று பெயர் உண்டு. இவர் வெளியூர்களுக்கு வியாபாரம் செய்ய சென்று வருவது உண்டு. அவ்வாறு சென்று வரும்போது ஒரு நாள் இரவு பொழுதை இங்குக் கழித்தார். அங்கு சமைப்பதற்காக சுண்டைக் காய்களை கல்லில் வைத்து நசுக்கினார். அப்போது எனக்கு கல்லடிபட்டு தலை வலிக்கிறது. உன்னிடமுள்ள மிளகை எனக்கு

எடுத்து பற்றுப்போடு என்ற குரல் அசாரீயாக குரல் கேட்டது. மிளகு செட்டியார் ஒன்று புரியமால் என்னிடம் மிளகு ஏது? உளுந்து தானே உள்ளது எனக்கூறிவிட்டு அடுத்த நாள் மிளகு மூட்டைகளை அவிழ்க்க அனைத்தும் உளுந்துகளாய் மாறியிருந்தது கண்டு ஆச்சரியமடைந்தார்.

இது இறைவனின் திருவிளையாடல் என எண்ணி மனம் உருகி இறைவனை வழிபட சுண்டைக் காய் நசுக்கிய இடத்தில் சுயம்புலிங்கமாக காட்சியளித்தார் என கூறுகின்றனர்.

63 நாயன்மார்களில் ஒருவர் கணம்புல்ல நாயனார். இவர் வறுமையால் வாடிய போதும் சிவ பூஜை செய்வதில் ஆர்வம் கொண்டிருந்தார். இவ்வூரில் கிடைத்த கிணாங்கு புல்லை விற்று ஆலயத்திற்கு தினமும் தீபம் ஏற்றி வழிபாடு செய்து வந்தார். கணம் புல்லை விற்றதால் அவருக்கு கணம் புல்ல நாயனார் எனப் பெயர் பெற்றார். இவரது உருவச்சிலை ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ளது.

இங்குள்ள கல்தூணில் பிருங்க ரிஷியையும், அர்த்தநாரீஸ்வரர் சிலையும் வடிவமைக்கப்பட்டு உள்ளது. சிற்ப வேலைபாடு கொண்ட இரண்டு யாழியின் வாயில் உருளும் கல் உருண்டையும் நுட்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

இக்கோவிலின் வினைதீர்க்கும் விநாயகர் பிரசித்தப் பெற்றது. இங்குள்ள விநாயகரை திருமணம் ஆகாத பெண்கள் பூசை செய்தால் விரைவில் திருமணம் நடக்கும் என்பது ஐதீகம். இதன் இடப்புறம் முருகன் ஆறுமுகங்களுடன் காட்சியளிப்பது சிறப்பு. ஈஸ்வரன் சந்நிதி முன்பு நந்தி தேவர் வணங்குவது போலவும் சிற்பங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

மூன்றாம் குலோத்துங்க சோழன் : (கி.பி.1219)

பேளூர் சின்ன ஏரிக்கரையில் மூன்றாம் குலோத்துங்க சோழனின் நாற்பத்தென்றாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. இதன் காலம் கி.பி. 1219 ஆகும். இதன்படி

இந்த சின்ன ஏரி கி.பி. 1219 க்கு முன்பே கட்டப்பட்டிருக்கலாம். இந்த ஏரிக்கு மதகை 'ஏரி வீரப்பட்டணத்தை சேர்ந்த வண்ணான் பிச்சன் சொக்கன் என்பவனும், அவன் மனைவி 'தாழிவடுகி' என்பவளும் ஆளுக்கொரு மதகு செய்வித்த செய்தியை தெரிவிக்கிறது.

கருவறையின் தென்புறமுள்ள கல்வெட்டு ஒன்று (11 நூ) கோவிலில் விளக்கெரிப்பதற்கும் இதர செலவனங்களுக்கும் 150 ஆடுகளும், 12 கழஞ்சு பொன்னும் கொடுக்கப்பட்ட தகவலை குறிக்கிறது.

கோவிலின் உள்ள உமாமகேஸ்வரி திருமேனி பீடத்தில் உள்ள சாசனத்தில் கி.பி. 1628 ல் பிரமோதுத ஆண்டு ஆவணி மாதம், பூர்வபட்சம் திதி, உத்திர நட்சத்திரம், திங்கட்கிழமையுமான நாளில் இப்பீடம் சேலம் பாளையக்காரன் சின்னம் நாயக்கரால் கொடுக்கப்பட்ட தகவலை குறிப்பிடுகிறது.

பேளூர் அருகேயுள்ள குறிச்சி கிராமத்தில் உள்ள கற்பலகை சாசனம் ஒன்று, ஆணை குந்தி வெங்கடபதிராயர் ஆட்சியில் மதுரை திருமலை நாயக்கன் காலத்தில் கி.பி. 1657 வெகுதான்ய வருஷம் ஐப்பசி மாசம் 7 ந்தேதி விஜயதசமியும், திங்கட்கிழமையும் பெற்ற நாளில் தான் தோன்றீஸ்வரருக்கு 'கொண்டப் பையன்' என்பவன் இண்டைக்குறிச்சி ஊரின் நான்கு எல்லை வரை நிலம் மானியமாக கொடுத்தான்.

தேன்படுவரையும், மீன்படுசுனையும் மேல்நோக்கிய மரமும், கீழ் நோக்கிய கிணரும் மற்றும் எப்பேர்பட்ட பல உரிமைகளையும் இந்நாயனார்க்கு பூதானமாகக் கொடுத்தேன் எனக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

கோவிலின் வெளியில் புதைந்து கிடக்கும் தூணில் உள்ள கல்வெட்டு ஆதித்த கரிகாலனின் மூன்றாம் ஆட்சியாண்டில் கொடுக்கப்பட்டதாகும்.

ஆதித்த கரிகாலன், ராஜ கேசரி சுந்தர சோழனின் முதல்

மகனும், முதல் ராஜராஜசோழனின் தமையனும் ஆவான். இவன் இளமையிலேயே பாண்டி நாட்டில் படையெடுத்து 'வீரபாண்டியனின் தலையைக் கொய்தான். பேளூரில் உள்ள இவனது கல்வெட்டில் வீரபாண்டியன் தலைக் கொண்ட கோப்பரகேசரிக்கு யாண்டு மூன்றாவது' என குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 969 ஆகும். பார்க்கவ குலத்தைச் சேர்ந்த மிலாடுடையான் அகளங்கன் மலையன் ஆதித்தனான செம்பியன் மிலாடுடையன் என்பவன், துறவி நாட்டில் உள்ள ஊராளிகளிடம், ஊர்த்திறையாக நாலேகால் கழஞ்சு பொன் வசூலிக்க வேண்டியதை இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பேளூர் கோட்டை :**

17 ஆம் நூற்றாண்டில் சேலம் பாளையக் காரன் லட்சுமண நாயக்கன் வசிட்ட நதிக்கரையில் பேளூரில் ஓர் 'அரண்மனை' கட்டினான். மேலும் தடாகங்களும், சமுத்திரங்களும் உண்டு பண்ணினான். பேளூர் கோட்டை மண்கோட்டை. மண் கோட்டை என்பதால் காலப் போக்கில் அழிந்தும், ஆக்ரமிப்பாலும் மண் மேடாய் மாறிவிட்டது. இப்போது பேளூர் கோட்டை இருந்த இடம் கோட்டை மேடு என வழங்கப்பட்டு வருகிறது.

பேளூர் லக்ஷ்மணனின் மூத்த சகோதரன் பெத்த நாயக்கன். அவன் அமைத்த பாளையம் அவன் பெயரால் வழங்கலாயிற்று. அதுவே தலைநகர். அங்கே அரண்மனையும் கோட்டையும் இருந்திருக்கின்றது.



ஆத்தூர் காமநாதேஸ்வரர் அம்மன் சன்னதி



தாரமங்கலம் யாழிசிற்பம்



நாமக்கல் ஆஞ்சிநேயர்



திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர்
கோயில் மண்டப தூண்கள்

# கோவில்களுக்கு வழங்கப்பட்ட மானியம் கொடை பற்றிய முக்கிய கல்வெட்டுச் செய்திகள்

### 1. நாமக்கல் வட்டம்- கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறை நுழைவாயில் இடப்பக்கம்

காலம் : கி.பி. 980

செய்தி : பிரதிகண்டன் என்பவன் திருவறப்பள்ளி ஆழ்வாருக்குக் கார்த்திகைத் திருவிழாவிற்குச் சாலைப்புறமாகக் குளம் உட்படக் கால்செய் நிலத்தைக் கொடையாக அளித்தமை.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்திஸ்ரீ கே
2. ஈப்பரகேசரிபந்
3. மற்க்கு செல்ல
4. ாநின்ற (ய) ாண்
5. டு பத்தாவது
6. ப்ரதி கண்டன்
7. தரச்சோழந் தி
8. ருவறப்பள்ளி யா
9. ழ்வார்க்கு காத்தி
10. கை காத்திகைத்
11. திருவிழாவுக்கு
12. சாலைப்புறமாக (ச்) ெ
13. ச (ய்) த நிலம் (காற் ெ)
14. சய் நிலம் கற்கண்
15. ணுக்கு மேல்
16. குளமுள்ப்
17. பட நீர் நி
18. லமாந
19. தெல்லா
20. ம் தேவர்
21. க்கு அவ்
22. வூரரோ

### 2. நாமக்கல் - வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் மண்டபத்தில் இருக்கும் தனிக்கல்

காலம் : கி.பி. 980

செய்தி : பிரதிகண்டன்தரச் சோழன் என்பவன் திருவுறப்பள்ளி ஆழ்வார்க்குக் கார்த்திகைத் திருவிழாவின் பொருட்டுச் சாலைப் புறமாக அரை செய் நிலம், குளம் உட்படக் கொடையாக அளித்தமை, கல்வெட்டுச் சிதைந்துள்ளது.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோபரகேச
3. ரிபன்மர்க்குச்
4. செல்லா நிற்கு யா
5. ண்டு பத்தாவ
6. து ப்ரதிகண்டன்
7. தர சோழனேன் தி
8. ருவறப்பள்ளி ஆழ்
9. வார்க்கு கார்த்திகை
10. க் கா (ர்) த்திகை திருவி
11. ழாவுக்குக் சா (லை)
12. புறமாக செ (ய்) த நில
13. ம் தாழன் நிலம் அ
14. ரை நில (ம்) கற்கண்ணு
15. க்கு மேலை (செய்க்கு)
16. ளமுட் ................

### 3. நாமக்கல் வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் நிலைக்கால்

காலம் : கி.பி. 986

செய்தி : உத்தமசோழனின் தாயார் பராந்தகன் மாதேவடிகள் என்ற செம்பியன் மாதேவியார் கொல்லிமலையிலுள்ள பன்னிரண்டு ஊராரிடத்து நூறு கழஞ்சுப் பொன் கொடுத்து அதன் வட்டியைக் கொண்டு வரும் வருவாயை ஒவ்வொரு திங்களும் அறப்பள்ளி ஈசுவரர் கோவிலில் சிறப்பு வழிபாடு நடத்த ஆவன செய்தமை.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ கே
2. ரப்பரகேசரி பர்ம்ம (ற்) க்
3. கு செல்லா நிந்
4. ற யாண்டு 16
5. ஆவது கொல்
6. லி நாட்டுக் கொ
7. ல்லிமலை மே
8. ற் திருவறுப்பாள்
9. ளி ஆழ்வார்க்கு கண்
10. டந் மதுராந்தக
11. (ந்) நாராய (ன) ஸ்ரீ உத்
12. தம சோழதேவர்
13. தங்கள் ளாட்சி பிரா
14. ந்தகந் மாதேவ
15. டிகளா (ர்) செம்பியந்
16. மாதேவியார் கொ
17. ல்லிமலை நா5டு உ
18. ள் காங்கயம் பருவூ
19. ர் ஊரலம் புந்த (ப்பு) ரம்
20. மேற்புந்தம் முத்
21. தூர் வெருணூார் வா
22. யலூர் மங்க
23. ஸம் க (யி) றங்க
24. ரடு நெடுவலம்
25. காமு (ள்) இவனைத்
26. தூர் (வ) சமும் செம்
27. பியந்மா தேவியார்
28. சந்திராதித்தவற்
29. நி (ற்) க்க திங்கள் ஸங்கர
30. மத்துக்கு வைத்
31. தபொந் குடிஞை
32. க் கல்லால் நூ ற்று
33. க் கழஞ்ச பொ
34. ந் கொண்டோம் இ
35. வனைத் தூரோமும்
36. இதுக்கு வைத்த பெ
37. பாந் கழஞ்சிந் வா (ய்)
38. திங்கள் பிளவு பொ
39. ந் பலிசை (ய) ாக்கி வ
40. ந்த பொந் குடிஞைக் க
41. ல்லால் கழஞ்சே க
42. ரல் திங்கள் ஒரு ஊராம் தி
43. ருவறப்பள்ளி ஸபை (ய)
44. ரர் வசம் குடுப்பதாதே (ர)
45. ம் ஸபை

**4. நாமக்கல் வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறயின் வடக்குப்புறச்சுவர்**

காலம் : கி.பி. 981

செய்தி : அறப்பள்ளி ஈசுவரர் கோவிலில் பணி செய்து வந்த 'மாணி' கள் நால்வர் கழஞ்சு பொன் பெற்றுக் கொண்டு வெருணூார் நிலத்தில் பயிர் செய்து விளைந்த அரிசியில் சந்தி ஒன்றுக்குத்

‘திருவெள்ளறை காணம்’ என அளவினால் நான்கு நாழியாக மூன்று சந்திக்கு பன்னிரு நாழி அரிசி பெற்றுப் பூசை செய்ய ஒப்புக்கொண்டமை.

<u>கல்வெட்டு</u> :

1. ஸ்ரீ கோப்பரகேசரி பந்மற்கு யாண்டு பதிநொன்றாவது திருவறப்பள்ளியுடையார்க்கு
2. திருவெள்ளறைக் காணத்தால் ஸந்தியொரோவொ
3. ந்றுக்கு திருவமுர்தரிசி நாநாழியாக ஸ்ந்திமூந்றுக்கு அரிசி பந்திரு நாழிக்கும் வெ
4. ருணூா ரில் நிலங்கொண்டு செய்து வருகிற மாணிகள் நல்வறக்கு இடும்
5. பொந்கழஞ்சும் சந்ராதித்தற்

### 5. நாமக்கல் வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப் புறச்சுவர்

காலம் : கி.பி. 984

செய்தி : மழபெருமாள் என்பவரின் மருமகள் கணலைத்தாதியர் என்பவர் திருவறப்பள்ளி இறைவர்க்குக் கார்த்திகைத் திருநாளின் போது விளக்கு வைக்கக் கொல்லிமலை நாட்டாரிடம் ‘மலைக்கல்’ என்ற எடையினால் இரு கழஞ்சுப் பொன் கொடுத்த செய்தி.

<u>கல்வெட்டு</u> :

1. கோப்பரகேசரிபற்மற்கு யாண்டு பதி
2. நாலாவது மழபெருமாள் மருமகள் கண (லை) தாதியார் அணிமூரி நாடாழ்வார் தேவியார் திருவறப்பள்ளி உடையார்க்கு திருக் கார்த்திகை

3. த் திருநாளுக்குத் திருவிளக்கும் தகளிக்கும் கொல்லிமலை நாட்டார் வசம் வைத்த பொந் மலைக் கல்லால் இரு கழஞ்சு இந்தந்மம் இறக்குவாந் வ

4. ழி யேழேச்சம் மறுவாந் ரக்ஷித்தாந் ஸ்ரீபாதம் எந்தலைமேலின

மலைக்கல் - அளவுப்பெயர்

## 6. நாமக்கல் வட்டம்- கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறயின் மேற்குப் புறச்சுவர்

காலம் : கி.பி. 11 ஆம் நூற்றாண்டு

செய்தி : திருவறப்பள்லி சபையாரிடம் இருபது கழஞ்சு பொன் பெற்று அதற்குக் கழஞ்சுக்கு ஆறு திங்களுக்கு வட்டியாகக் ஐங்குறுணி வீதம் இருபது.கழஞ்சுக்கு ஆண்டுக்கு வட்டியாகப் பதினாறு கலனே இருதூணி நெல் பெறப்பட்டது. இந்த நெல்லில் கோவில் உவச்சு (மேளம்) கொட்டும் ஒருவனுக்கு நாள்தோறும் கொங்கம் என்னும் அளவால் மூன்று நாழியாக ஆண்டுக்குப் பதினொரு கலனே முக்குறுணி அளக்கப்பெற்றது. எஞ்சிய ஐங்கலனே ஐஞ்குறுணி நெல்லுடன் பருவூர் பலகுடிகள் பெற்ற கலஞ்சுப் பொன்னின் வட்டியும் சேர்த்து மொத்தம் பத்து கலனே குறுணியும் கோவிலில் மூன்று வேளையும் சங்கு ஓதுபவனுக்குக் கொடுக்கப்பெற்ற செய்தி.

**<u>கல்வெட்டு</u>** :

1. திருவறப்பள்ளி ஸபையார் கடவ பொந் இருபதின் கழஞ்சு வாயாற் திங்கள் ஐங்குறுணி ஆட்டை வட்டங் கடவ பூப்.

2. பலிசை நெல்ப் பதிநூறு கலநே இருதூணி இந்த நெல் உவச்சு கொட்டும் ஆளில் ஒருவனுக்கு நித்தம் கொங்கத்தால் முந்நாழி ஆக ஓராட்டைக்கு நெ

3. ல் பதிநொரு கலநெ முக்குறணியும் சந்தராதித்தவர் செல்லுவதாகவும் நீக்கி நெல் ஐங்கலநே ஐங்குறுணியும் பருவூரில்ப் பல குடிகளாய்க் கட

4. வ பொந் கழஞ்சு கழஞ்சிந் வாய் ஆறு திங்கள் தூணியாக ஆட்டை வட்டம் கடவ நெல் நார்க்கலதே இரு தூணியும் ஆக நெல் பதிந் கலநே குறுணியும் மூந்

5. று ஸந்திக்கு திருவிழா எடுக்கும்போது சங்கொத்துவாந் ஒருவனுக்கு சந்திராதித்தவர் செலுத்துவதாகவும்

## 7. நாமக்கல் வட்டம் - கொலலிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறயின் தென்மேற்குப்புறச்சுவர்

காலம் : கி.பி.1082

செய்தி : இராசமகேந்திர தேவர் ஆட்சிக்காலத்தில் கொல்லிமலை நாட்டில் வாயனூரார் செலுத்த வேண்டிய வரியைத் திருவறப்பள்ளி இறைவார்க்குச் செலுத்துமாறு ஆவன செய்யப்பெற்றது. அப்பணி தொடர்ந்து நடைபெறவில்லை. அரசனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் கொல்லிமலை நாட்டாரும் கோவில் தாந்ததாரும் பல மண்டலத்து மாயேசுவரர்களும் அதை மீண்டு நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். அதனால் வயலூராரிடமிருந்து வரவேண்டிய நான்கு கல நெல் விதைப்பாட்டளவினால் நிலவருவாய் மீண்டும் அறப்பள்ளி இறைவர்க்கு உரிமையாக்கப் பெற்றது.

<u>கல்வெட்டு</u> :

1. ஸ்வஸ்திஸ்ரீ ராஜமஹேந்திர தேவ
2. ற்கு கொல்லிமலை நாடு இறை

3. இறுத்துபோது வயலூர் இறை
4. விடையார் திருவறப்பள்ளி விடையாற்க்கு சி
5. றம்பாக விட்டுச் சென்று செல்லா
6. மையால் செல்விதாக கொலோத்து
7. ங்க சோழதேவற்கு யாண்டு
8. பன்னிரண்டாவதில் கொல்லிமலை னாடும்
9. திருவறப்பள்ளித்தாநமும் திருவன
10. ....னில்த் தாநமும் பல மண்டல
11. த்தில் மாயேஸ்வரரும் இச்சிறப்ப
12. ச் செல்ல வேணுமெந்றும் வாய
13. லூ ராரை இக்கழி நாற்கல நெல் வி
14. தையும் விடுவித்து கல்வெட்டு வி
15. த்தோம் இந்நிலம் குஞ்சப்பள்ளிப் பரப்பில்
16. தூ ணிபதக்கிருநாழி பெருதுறை ஆற்றில் முக்
17. குறுணி னானாழி புலத்துறை கழநி இரு
18. நாழி குறைய தூணி ஊர் கழனிஇயில் இரு தூ
19. ணி இருநாழி மணக்கண் பரப்பில் ஐங்குறுணி இருநாழி நா இ
20. னத்தில் கழநி ஐங்கு
21. றுணி பாசி கழனி தூணி
22. பதக்கு ஆத்திகுழி கழ
23. நி இருதூணி சோலை க
24. ழனி பன்னிருநாழி வ

### 8. நாமக்கல் வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறயின் தென்மேற்குப்புறச்சுவர்

காலம் : கி.பி.1082

செய்தி : இராசமகேந்திர தேவர் ஆட்சிக்காலத்தில் கொல்லிமலை நாட்டில் வாயனூரார் செலுத்த வேண்டிய வரியைத் திருவறப்பள்ளி இறைவார்க்குச் செலுத்துமாறு ஆவன

செய்யப்பெற்றது. அப்பணி தொடர்ந்து நடைபெறவில்லை. அரசனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் கொல்லிமலை நாட்டாரும் கோவில் தாந்ததாரும் பல மண்டலத்து மாயேசுவரர்களும் அதை மீண்டு நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். அதனால் வயலூரராரிடமிருந்து வரவேண்டிய நான்கு கல நெல் விதைப்பாட்டளவினால் நிலவருவாய் மீண்டும் அறப்பள்ளி இறைவர்க்கு உரிமையாக்கப் பெற்றது.

<u>கல்வெட்டு</u> :

1. ஸ்வஸ்திஸ்ரீ ராஜமஹேந்திர தேவ
2. ற்கு கொல்லிமலை நாடு இறை
3. இறுத்துபோது வயலூர் இறை
4. விடையார் திருவறப்பள்ளி விடையாற்க்கு சி
5. றம்பாக விட்டுச் சென்று செல்லா
6. மையால் செல்விதாக கொலோத்து
7. ங்க சோழதேவற்கு யாண்டு
8. பன்னிரண்டாவதில் கொல்லிமலை னாடும்
9. திருவறப்பள்ளித்தாநமும் திருவன
10. ....னில்த் தாநமும் பல மண்டல
11. த்தில் மாயேஸ்வரரும் இச்சிறப்ப
12. ச் செல்ல வேணுமென்றும் வாய
13. லூ ராரை இக்கழி நாற்கல நெல் வி
14. தையும் விடுவித்து கல்வெட்டு வி
15. த்தோம் இந்நிலம் குஞ்சப்பள்ளிப் பரப்பில்
16. தூ ணிபதக்கிருநாழி பெருதுறை ஆற்றில் முக்
17. குறுணி னானாழி புலத்துறை கழநி இரு
18. நாழி குறைய தூணி ஊர் கழனிஇயில் இரு தூ
19. ணி இருநாழி மணக்கண் பரப்பில் ஐங்குறுணி இருநாழி நா இ
20. னத்தில் கழநி ஐங்கு
21. றுணி பாசி கழனி தூணி

22. பதக்கு ஆத்திகுழி கழ
23. நி இருதூணி சோலை க
24. ழனி பன்னிருநாழி வ

## 9.நாமக்கல் வட்டம்- கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் மேற்குப் புறச்சுவர்

காலம் : கி.பி.12 ஆம் நூற்றாண்டு

செய்தி : வீராணச்செட்டி பெற்ற இருப்பந்தைந்து கழஞ்சுப் பொன்னுக்கும் கழஞ்சுக்கு ஆறு மாதத்திற்குத் தூணி நெல்லாக ஆண்டுக்கு நெல் பதினாறு கலனே இருதூணி நெல்லைக் கொண்டு 'கறடிகை' என்னும் கருவியை இசைக்கும் இசைஞனுக்கு நாள் ஒன்றுக்கு கொங்கத்தால் மூன்று நாழியாக ஆண்டுக்குப் பதினாரு கலனே முக்குறுணி அளிக்கப் பெற்றது. எஞ்சிய ஐங்கலனே ஐங்குறுணி நெல்லைக் கொண்டு திருவறப்பள்ளியுடையார்க்கு மூன்று சந்திக்கும் படைக்கப் பெற்றமை.

<u>கல்வெட்டு</u>

1. வெருணூற் அறப்பள்ளியுடாந் வீராணச் செட்டி கடவபொந் இருபத்தைங் கழஞ்சும் கழஞ்சிந் வாய் ஆறு திங்கள்த் தூணியாக ஆட்டை வட்

2. டம் பதிந்நூறு கலநே இருதூணி இந்த நெல் கரடிகை கொட்டுவாந் ஒருவனுக்கு நித்தம் கொங்கத்தால் முந்நாழி ஆக ஓராட்டைக்கு நெல் பதிந்நொரு

3. கலநே முக்குறுணியும் நீக்கி ...... நெல் ஐங்கலநே ஐங்குறுணி நெல்க் கொண்டு திருவறப் பள்ளியுடை -யார்க்கு ஒரு ஸந்திக்கு அடைக்காயமுர்து நா

4. லும் வெற்றிலை பந்நிரண்டுமாக மூந்து ஸ்ந்திக்கும் அடைக்காயமுது பந்நிரண்டு வெற்றிலை முப்பதாறும் சந்திராதித்தவர் செலுத்துவதாகவும்.

## 10. நாமக்கல் வட்டம் - கொல்லிமலை அறப்பள்ளி ஈசுவரர் கோவில் கருவறையின் வடக்குப் புறச்சுவர்

காலம் : 01.02.1611

செய்தி : நரலோக கண்டவங்கி நாராயணன் கோனூர் இராமச்சந்திர நாயக்கர் மகன் இம்முடி இராமச்சந்திரர் காலத்தில் அறப்பள்ளி ஈசுவரர் கோவில் திருப்பணி நடைபெற்றது. அந்நாளில் நாச்சியார் திருமேனி ஒன்றையும் எழுந்தருளுவித்தார். குத்தமலை நாட்டின் அசை என்ற ஊர் அக்கோவிலுக்குச் சர்வமானியமாக அளிக்கப்பெற்றது. அவ்வூர் இன்று 'அசக்காடு' என்று வழங்கப்பெறுகிறது.

**கல்வெட்டு**

1. ஸீபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ மத் ராஜாதிராஜராஜ பரமேவ்வரத் ஸ்ரீ வெங்கடபதி தேவ மஹாராயர்
2. ப்றுத்விராஜ்யம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1532 இதன் மேல் செல்லாநெஎன்ற சாதாருண வருஷம் மாசி மாதம் 5 தேதி விசுவ நாத வீரப்ப முத்துவீரப்ப நாயக்கர் காலத்தில் நரலோக கண்ட வங்கி நாராயணன் கோனூர் றாமச்சந்திரானாயக்கர்
3. குமாரர் இம்முடி றாமச்சந்திரனாயக்கர் புண்ணியமாக அறப்பள்லி ஈஸ்வரந்னாச்சியார் ஜீர்ணோதாரமாகையில் வாசல் பிறதாநி.
4. விந்தியுடை பிச்சனார் அம்பாயிரம் செல்ல உகந்தாரும் கஸ்தூரி னாயக்கரும் மல்லணனாயக்கரும் வாசல் பேரும் அனுகூலமாய்
5. அகிலாண்ட தீஷிதா சிற்பாசாரி அவினாசியும் நாச்சியார் திருமேனிக் கொண்டு பிறதிட்டை வேலையில் ஸஹிஷரண்டோதர தாரா பூ

6. றுவமாக குத்தமலை னாட்டில சைக்கிறாமம் அறப்பள்ளி ஈஸ்வரனுக்கு சறுவமானியமாகதார வாத்துக் குடித்தபடியின்

7. இந்த தனமத்தை சந்திராதித்த வரையும் இத்தம்மத்தை .... பரிபாலனம் பண்ணி னடத்தி வரக் கடவராகவும் இதுக்கு அருதம் பண்ணினால் (கங்)கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலேயும் தன்மின ... தா ... நா ... கொன்ற தோஷத்திலேயும் போக கடவராகவும் இத்தன்மசாதனம் எழுதினமைக்கு பள்ளி கொ ... பாரதியார்.

8. நல்ல தம்பியார் நல உல ... மிகு ....

### 11. ஓமலூர் வட்டம் - தாரமங்கலம் இளமீசுவரர் கோவில் முன் மண்டபத்தின் வடக்குப்புறச்சுவர்

காலம் : 21.07.1281

செய்தி : தாரமங்கலத்து நாட்டு முதலிகளில் நல்லுடையப்பர் என்பவர் தன்னுடைய தந்தையின் பெயரில் அமைத்த இலக்குமண சதுர்வேதி மங்கலத்துப் பட்டர்களுக்குப் பூவாணி நாட்டவர் விற்றுக்கொடுத்த நன்செய் புன்செய் நிலஉரிமை பற்றியது.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோற்ச்சடபன்மரான த்ரிபுவனச் சக்கரவர்த்(தி)க(ள்) ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு 6 (வது) ஆறாவது கற்கடக நாயற்று.

2. பூர்வ்வ பக்ஷத்து சதுர்திஸியும் திங்கட்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் கொங்கான வீரசோழமண்டலத்து பூவாணியநாட்டுத் தாரமங்கலத்து முதலிகளில் நீருணி இளையான் நல்லுடையப்பன் தங்கள் பிதாக்க(ள்) பேர் வைத்த இளையபெருமாள் (க) ஸ்ரீ ல க் க்ஷ ம ண ச்

சதுர்வ்வேதி மங்கலத்து பட்ட(ர்)களுக்கு இந்நாட்டு நாட்டவரோம்.

3. விற்றுக்குடுத்த இந்நாட்டுக் காரக்குளம் நான்கெல்லைக் குட்ப்பட்ட புன்செயும் நத்தமும் சேமப்பள்ளிஏரி உள்ளிட்ட ஏ(ரி)களால் நீர்பாயும் நஞ்சையும் இ(வ்)வூர்ப்பற்றில் நீர்நிலை தேவநாதம் திருவிடையாட்டம் உள்ளிட்ட நி(ல)ம் நீங்கலாக இவ்வூர் விற்றுக் குடுத்தோம் ஸ்ரீ

4. லக்ஷமணச் சதுர்வ்வேதி மங்கலத்து அகரப்பட்ட(ர்)களுக்கு இ(ந்)நாட்டு நாட்டவரோம் இப்படி விற்றுக்குடுத்த இவ்வூர்க்கு விற்றுக்குடுத்து

5. கொள்வதாத எ(ம்) மிலிசைந்து விலை(ப்)பொரு ளன்றாடு நற்பண(ம்) 1500 இப்பண(ம்) ஆயிரத்தஞ்ஞூற்றுக் (கு)ம் விலைக்குற விற்றப் பொருளு(ற)

6. க் கைக்கொண்டு உதகபூர்வ்வமாக விற்று விலை ப்ரமாணம் பண்ணிக் குடுத்தோம் இவ்வகரத்து பட்ட(ர்)களுக்கு இ(ந்)நாட்டு நாட்டவரோ(ம்)

7. இப்படி விற்றுக்குடுத்த இவ்வூர் இன்னாள்முதல் இவர்கள் கைய்க்கொண்டு தாங்கள் வேண்டும் அனைத்துப் பயிரும் செய்

### 11. ஓமலூர் வட்டம் - தாரமங்கலம் இளமீசுவரர் கோவில் முன்மண்டபத்தின் வடக்குப்புறச்சுவர்

காலம் : 01.08.1289

செய்தி : தாரமங்கலத்து முதலிகள் இளமாண்டை உள்ளிட்டார் சிலர் நல்லுடையப்பரிர் முதலியார் பெயரில் வைத்த அகரத்துப் பட்டர்களுக்குக் கொடுத்த செய்தி இடம் பெற்றுள்ளது. அவ்வூரின் குளம் உடைந்து பாழடைந்தமையால் அதைச்

செப்பனிட்டு நீர் பாய்த்துக் கொள்ளவும் நீர்பாய்ந்த விளையுளைத் துய்த்துக் கொள்ளவும் உரிமை வழங்கப் பெற்றமை.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோற்சடபன்மரான த்ரிபுவனச் சக்ரவத்திகள் ஸ்ரீ சுந்தர பாண்டியதேவர்க்கு யாண்டு பதி(ன்) மூன்றாவது ஸிம்ஹநாயற்று பூர்வ்வ பக்ஷத்து த்ரயோதஸியும் திங்கள் கிழமையும் பெற்ற உத்திராடத்து நாள் கொங்கான வீரசோழ மண்டலத்து வடபூவாணிய நாட்டு

2. தாரமங்கலத்து முதலிகளில் க(டு)ந்தர்க்கமுதலியும் சாத்தர்முதலி உடையப்பனும் க(ரி)யதேவர் பெரிய முதலியும் ஆனைக்குட்டி சிலம்பாண்டையும் உடையப் பன்ஆனையாரும் பிள்ளைமுதலியார் முதலியும் சிறு உடையான் முதலியும் மேல்ப்படி இளமாண்டையும் இ.

3. வனைவோம் இ(வ்)வூர் நீருணி இளையான் நல்லுடையப்பர் தங்கள் முதலியார் பேரால் வைக்கிற அகரப்பட்ட(ர்)களுக்கு நாங்கள் உதகபூர்வ்வதர்ம்மதாந ப்ரமானம் பண்ணிக்குடுத்த பரிசாவது இ(வ்)வூர் காரைகுளம் உடைகுளமாய்ப் பாழேகிடக்கிற குளம் உடை(ட)புக்கு முன்பே மன லொழுக்கி குளமும் அடை

4. த்து இக்குளத்தால் நீர் காட்டி கொள்ளலாம் நிலம திருத்தி இன்னிலமும் இக்குளத்தில் நீர் கோவையும் மேனோக்கின மரமு(ம்) கீணோக்கின கிணறும் உட்படட உதகபூர்வ தர்மம் தாநமாகக் குடுத்தோம் இ(வ்)வக(ர)த்தில் பட்ட(ர்) களுக்கு இ(வ்)வணைவோம் இப்படி குடுத்த இந்நிலம் தான் வேண்டும் அனைத்து பயிர்களும் செ(சய்)து செ

5. காண்டு வேண்டும் வில்வ்ரக்ஷங்க(ளு)ம் வைத்து(க்)கொண்டு சந்ராதித்யர் செல்ல பூதாத இறையிலியாக அனு(ப)விக்கடவர்களாகவும் இது இவர்களுக்கு தாநாதமநவிக்ரயங்களுக்கு உ(ரி)த்தாவதாகவும் இப்ப(டி) சம்மதித்து

உதகபூர்வ்வதர்ம்ம தாந ப்ரமாணம் பண்ணிக குடுத்தோம் இ(வ்)வுகரப்ப(ட்)ட(ர்)களுக்கு இ(வ்)வணைவோம்.

6. இப்படிக்கு இவை சிறுஉடையான்முதலி எழுத்து இப்படிக்கு இவை பிள்ளை முதலியார் மகன் முதலி எழுத்து இப்படிக்கு சாத்தர்முதலி உடையப்பன் எழுத்து இப்படிக்கு சிறுஉடையான் இ(ள)மாண்டை எழுத்து இப்படிக்கு இவை ஆணையார் எழுத்து இப்படிக்கு இவை ஆணைக்குட்டி சிம்பாண்டை எழுத்து இப்படிக்கு இவை

7. வ கடுதர்(க்)க முதலியார் எழுத்து இப்படிக்கு இவை பெரிய முதலியார் கைய்மாட்டாங்கானமைக்கு தாரமங்கலத்து தட்டான் திருக்(கை)கவெல் எழுத்து உ

### 12. ஓமலூர் வட்டம் - தாரமங்கலம் கபிலாயநாதர் கோவில் முன்மண்டபத்தின் வடக்குப்புறச்சுவர்

காலம் : கி.பி.13 ஆம் நூற்றாண்டு

செய்தி : வட பூவாணிய நாட்டில் பூங்குளம் என்உம் ஊரில் வாழ்ந்த கொப்பயத் தண்ணாக்கரின் பிள்ளைகள் மூவர் கயிலாயநாதர் கோவிலுக்குத் தேவதான இறையிலியாக நன்செய், புன்செய் நலங்கள் அளிக்கப்பெற்றன. கல்வெட்டு சிதைந்துள்ளது.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்திஸ்ரீ இராமனாத தேவற்கு ஆண்டு 14 (ஆவது வட பூவா)
2. ணிய நாட்டு பூங்குளத்தி - லிருக்கும் கொப்பய (த)ண்ணா(க்கர்)
3. மக்களில் இராகுத்தராய அருளாளத் தண்ணாக்கரும் பே
4. ய்க்கடித் தண்ணாக்கரும் தேத்தயத் தண்ணாக்கரும்
5. பூவாணியனாட்டுத் தாரமங்கலத்து உடையார் ஸ்ரீ கை
6. லாயமுடைய நயினாற்கு இராமனாத(தே)தவன் இறையிலி

7. தேவதானமாக விட்டருளின .....(ட்டுவனாதி ந)ஞ்சை

8. புஞ்சை நூற்பாங்கெல்லையும் மேல் (நே)ாக்கின மரமு

9. ங் கீழ்னோக்கின கிண(று)ம் ம(ற்)றும் (மேப்பெ) ற்பட்டன (வு)ம்

10. இறையிலி தேவதா(ன)ம் .......... த

11. ன்மத்தை அழித்தான் கெ ............. கார(ா)ம்ப

12. .......... (வக் கொன்)ற ...........

13. .........வும் சுபமஸ்து

### 13. ஓமலூர் வட்டம் - தாரமங்கலம் இளமீசுவரர் கோவில முன்மண்டப வடக்குப்புறச்சுவர்

காலம் : கி.பி. 1279

செய்தி : இளமீசுவருடைய நாயனார்க்குத் தாரமங்கலத்து ஊரவரும் முதலிகளும் தேவதான இறையிலியாக எல்லைகள் வரையறுத்து நிலம் வழங்கிய செய்தி இடம்பெற்றுள்ளது.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸர்வ்வ பூமிக்சக்கரவத்திகள் ஸ்ரீ போசள வீரராமனாத தேவர்க்கு யாண்டு 20வது சித்திர மாதம் முதற்தியதி கொங்கான வீரசோழ மண்டலத்து வ

2. ட பூவாணிய நாட்டுத் தாரமங்கலத்து உடையார் இளமீஸ்வரமுடைய நாயனார்க்கு இத்தாரமங்கலத்து ஊரவரும் முதலிகளும் தேவதானமாக விட்ட நிலமாவது இ

3. வ்வூர் ஊரேரி(க்)கீழ் நன்செய் நிலத்து உடையார் ஸ்ரீ கையிலாஸமுடைய நாயனார் தேவதானத்துக்குக் கிழக்கும் தெற்கும் ஆன நிலம் தடிபல குழி ஐஞ்ஞாறும்

சந்ராதி(த்)தவை

4. ர செ(ல்)ல(க்) கடவதாக உதகபூர்வவமாக குடுத்தோம் உடையார் இளமீவ்வரமுடைய நாயநார்க்கு ஊரவரும் முதலிகளும்

## 14. ஓமலூர் வட்டம் - தாரமங்கலம் இளமீசுவரர்கோவில் கருவறை மேற்குப்புறச்சுவர்

காலம் : கி.பி.1254

செய்தி : வட பூவாணிய நாட்டுத் தாரமங்கலத்து இளமீசுவரர் கோவிலுக்கு முதலியார் சிலர் சேர்ந்து தங்களுக்கு உரிமையான நிலத்தை இறையிலியாக நானூறு குழி நிலத்தை நீர்வார்த்து உரிமை செய்த செய்தி குறிப்பிடப்பெற்றுள்ளது.

: திருச்செங்கோடு நாகர்குன்றின் மேற்குப்புற படிகளின் அருகிலுள்ள பாறை

காலம் : கி.பி 10 ஆம் நூற்றாண்டு

செய்தி : திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்களிடம் கோவிலில் சனிக்கிழமை தோறும் எண்ணெய் நீராட்ட அறக்கட்டளையாகப் பதினாறு கழஞ்சுப் பொன் அளிக்கப்பெற்றமை.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜகேஸரிவர்ம்மற்கு யாண்டு
2. அஞ்சாவது திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு ந
3. ட்டுப் பெருமக்கள் கையில் சனிதொறு நாழி யெண்
4. ணை மலையிலோணத்தால் சனி யெண்ணை அட்டு
5. வதாக வெங்கால நாட்டு வெள்ளூர்ப் புலியங் கடம்
6. பனான பமஞ்சவன் வெள்ளூர் கிழவன் வைத்த செம்பொ
7. ன் காசெட்டாங் கல்லாற் பதினாறு கழஞ்சு இப்பொன்
8. னின் பலிசை கொண்டு சந்திராதித்தவற் சனி யெ

9. ண்ணை அட்டுவதாக என்றோம் பெரும
10. க்களோம்

## 15. திருச்செங்கோடு மலைமேல் நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை

காலம் : கி.பி.10 ஆம் நூற்றாண்டு

செய்தி : இளங்கோனடிகள் மனைவி மூரிகாமக்கனார் என்பவர் திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள் குழுவிடம் இருபது கழஞ்சுப் பொன் கொடுத்தார். இப்பொன் காசெட்டாங்கல் என்னும் அளவால் நிறுக்கப்பெற்றது. இதிலிருந்து வந்த வட்டியில் இருபது அந்தணர்க்களுக்குத் திருவோகாதசி நாள்தோறும் உணவு படைக்கக் கணப்பெருமக்கள் ஒப்புக் கொண்டமை.

<u>கல்வெட்டு</u>

1. கோவிராஜகேஸரி வர்மர்க்கு யாண்டு பதின்மூன்றாவ
2. து திருச்செங்கோட்டு பன்னிரண்டு நாட்டு (ப் பெரு)
3. மக்கள் கையில் லிளங்கோ(ன)டிகள் தேவியா
4. ர் மூரி காமக்கனார் திருவேகாதஸிக்கணத்துக்கு வை (த்)
5. த செம்பென் க/ா/ (செட்டாங்) கல்லால் இருபதி
6. ன் கழஞ்சு இப்பொன்னின் பலிசை கொண்டு ச
7. ந்ராதத் (தவ)ல் திருவேகாதஸிதோறும் இருபது
8. ப்ராஹமணரை யூட்டுவதாக (போந்தது) திருவேகா
9. தஸிவக் கணப்பெருமக்களோம்

## 16. திருச்செங்கோடு நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை

காலம் : கி.பி.13 ஆம் நூற்றாண்டு

செய்தி : மூரி அமுதனார் இளங்கோனடிகள் மனைவி மூரி காமக்கனார் திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்களிடம் பதினைந்து கழஞ்சுப்

பொன் கொடுத்து அதன் வட்டி வருவாயைக் கொண்டு அர்த்தநாரீசுவரருக்கு நந்தா விளக்கொன்று வைக்கச் செய்தமை.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராச (கேசரிபன்) மர்க்கு திருவெழுத்திட்டுச் செல்லாநி
2. ன்ற யாண்டு பதினாலாவது இவ்வாண்டு திருச்செங்கோட்டு பன்னிரண்
3. (டு) நாட்டுப் பெருமக்கள் (கை) யி (லி) ல் இளங்கோனடிகள் தேவியார் மூ
4. (ரி) அமுதனார் திருச்செங்கோட்டு ஆள்வார்க்கு ஒரு நொந்தா விளக்கெரி
5. ப்பதாக (வை)த்த செம்பொன் (கா) செட்டாங் கல்லால் பதினைங் கழஞ்சு இப்பொ
6. ன்னின் பலிசை (கொ)ண்டு சந்திராதித்தவல் நொந்தா விளக்கெரிப்பதா என்றோம் பெ
7. ருமக்களோம் மூரி அமுதினுக்கு

## 17. திருச்செங்கோடு மலைமேல் நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை

காலம் : கி.பி.13 ஆம் நூற்றாண்டு

செய்தி : இளங்கோன் மனைவி மூரிஅமுதனார் திருச்செங்கோட்டுப் பன்னிரண்டு நாட்டுப் பெருமக்களிடம் திருஏகாதசிப் பூசைக்குப் பொன் கொடுத்தாள். அதனால் வருகிற வட்டியில் திரு ஏகாததசி நாளில் அந்தணர்களுக்கு உணவு கொடுக்கச் செய்தார்.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜ (கேஸரி)வர்மற்கு செல்லாநின்ற
2. பதினாலாவது திருச்(செ)சங்கோட்டு பன்னிரண்டு நாட்டுப் பெருமக்கள் கைய்யில்

3. .... கான் தேவியார் ஶூரி(அ)முதனார் (திருஏ) காதசி ....
(பூ)சைக்கு வைத்த பெரு(ந்திரு)

4. ....பொன்னின் (ப)லிசை கொண்டு (சந்திர)ா தித்துவல் ...

5. ஊட்டுவதாக (பொ)ன் கொ .... (ஏ) காதசிக்கு

### 18. திருச்செங்கோடு நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு

செய்தி : இளங்கோனடிகள் மனைவி ஶூரி காமக்கனார் திருச்செங்கோட்டுத் திருவாதிரைக் கணப்பெருமக்களிடம் இருபது கழஞ்சுப் பொன் கொடுத்து அதன் வட்டி வருவாயைக் கொண்டு இருபது அந்தணர்களுக்கு உணவு அளிக்கச் செய்தமை.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோராஜகேஸரிவர்மற்கு யாண்டு பதி
2. னாலாவது இவ்வாண்டு திருச்செங்கோட்டுத் திருவாதி
3. ரைக் கணப்பெருமக்கள் கையில் லி(ள)ங்கோனடி
4. கள் தேவியார் ஶூரி காமக்கனார் ஏக வீர திவாகர தேவரை
5. ச் சாத்தி வைத்த செம்பொன் காசெட்டாங்கல்லால் இ
6. ருபதின் கழஞ்சு இப்பொன்னின் பலிசை கொண்டு
7. (தி) ருவாதிரை தோறுந் திங்களிருபது ப்ராஹ்மணரை
8. ந்ராதத்தவல் ஊட்டுவதாக என்றோந் திருவாதிரைக் க
9. ணப் பெருமக் (களோம்)

### 19. திருச்செங்கோடு நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு

செய்தி : பேரங்கிமணியின் மனைவி கொற்றந்தைப்

பொதுவன் மாரி என்பவர் தான் பிறந்த புரட்டாதி சோதி நாளில் அந்தனர்களுக்கு உணவு படைக்கண அர்த்தநாரீசுவரர் பெயரில் பாண்டியநாட்டுப் பெருமக்களிடம் இருபந்தைந்து கழஞ்சுப்பொன் கொடுத்தமை.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோ விராசகேசரிவன்
2. மர்க்கு திருவெழுத்திட்டுச் செல்லா
3. (நின்ற) யாண்டு 16வது திருச்செங்கோட்டுப் பாண்
4. டி நாட்டுப் பெருமக்கள் கைய்யில் கொ .....
5. .... ந்து வாழும் பேரங்கிய் மணியன் மா
6. ....ணவாட்டி கொற்றந்தை பொதுவன் மாறி பிறந்த
7. புரட்டாதித் திங்கள் சோதி நாள் மலை விலக்கி .....
8. ப்ராஹமண போஜனஞ செய்வதற்கு .... ன் கொற்றந்தை பொ
9. ணப் பெருமக் (களோம்)

**20. திருச்செங்கோடு நாகர்குன்றுக்கு மேற்கிலுள்ள பாறை**

காலம் : கி.பி.13 ஆம் நூற்றாண்டு

செய்தி : பேரங்கிமணியன் மனைவி கொற்றந்தைப் பொதுவன் மாரி என்பவர் தான் பிறந்த புரட்டாதி மாதம் சோதி நாளில் அந்தனர்களுக்கு உணவு படைக்க அர்த்தநாரீசுவரர் பெயரில் பாண்டியநாட்டுப் பெருமக்களிடம் இருபத்தைந்து கழஞ்சுப் பொன் கொடுத்தமை.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோ விராசகேசரிவன்
2. மர்க்கு திருவெழுத்திட்டுச் செல்வா
3. (நின்ற) யாண்டு 16 ஆவது திருச்செங்கோட்டுப் பாண்
4. டி நாட்டுப் பெருமக்கள் கைய்யில் கொ ....
5. ....ந்து வாழும் பேரங்கிய் மணியன் மா

6. ....ணவாட்டி கொற்றத்தை பொதுவன் மாறி பிறந்த
7. புரட்டாதித் திங்கள் சோதி நாள் மலை விலக்கி ....
8. ப்ராஹமண போஜனஜ செய்வதற்கு .....ன் கொற்றந்தை பொ
9. துவதும் இவள் மணவாளன்னான பேரங் .....னும்
10. ..... இவனைச் சார்த்தி வைய்த்த பொன் ..... ம் இருபத்தைஞ் கழஞ்
11. சு இப்பொன்னின் பலிசைக் கொண்டு ஆண் (டு தோ)று
12. மொழுக்கமாக புரட்டாதிச் சோதி நாள் மலை வில ...
13. ளிப்ராஹமண போஜனஞ் செய்வதாக சந்ராதத் ....
14. ல் செய்வதாக எ(ன்றோம்) பாண்டிநாட்டு பெரும (க்க)
15. ளோம்

### 21. திருச்செங்கோடு மலைமேல் அறுபதாம் படிக்குக் கிழக்கிலுள்ள பாறை

காலம் : கி.பி.1255

செய்தி : ஈரோட்டைச் சேர்ந்த மணிகண்டி ஒடைய மாந்தாளுக்காக அரட்டனக்க மகன் திருவோணக் கணக்பெருமக்களிடம் இருபது கழஞ்சுப் பொன் கொடுத்து அதனின்று வரும் வட்டியில் திங்கள் தோறும் அந்தணர்களுக்கு உணவளிக்கச் செய்தமை.

<u>கல்வெட்டு</u>

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரிவர்ம(ற்)கு யாண்டு 9 ஆவ
2. து திருச்செங்கோடு திருவோணக் கணப்பெருமக்கள்
3. கையில் திங்கள் தோறும் ஒழுக்கமாக இருபது ப்ரா
4. ஹமணரை சந்த்ராதித்தவல் நின்றது சான்றாக ஊட்டு
5. வதாக ஈரோட்டிருக்கு மணிகண்டி ஒடயமாந்தா
6. ளுக்காக அரட்டனக்க மகன் திருவோணக் கணப்பெருமக்கள்
7. வசம் வைத்த பொன் இருபதின் கழஞ்சு பொன்னு
8. ங் கொண்டு இருவது ப்ராஹமணரை இப்பொண்ணின் ப

9. விசை கொண்டு ஊட்டுவதாக என்றோம் திருவோணக்க
10. ணப்பெருமக்களோம் இது இறக்குவா .... த்தானம
11. றவான் காத்தா (னடி) என் தலைமேலின

### 22. திருச்செங்கோடுசுப்பிரமணியர் சன்னதிக்கு முன்னுள்ள மண்டபத்தின் வடக்குச்சுவரின் குமுதப்படை

காலம் : கி.பி.1522

செய்தி : குன்றத்தூர்த் துர்க்க பன்னிரண்டு நாட்டுக்கு அலுவலர் திரியம்பக உடையார் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு அர்த்தநாரீசுவரமுடைய தம்பிரானாக்கு உத்திராட நட்சத்திரத்தில் கொடியேற்றத்துக்கும் இரேவதி நட்சத்திரத்தில் தெப்பத் திருநாள் நடத்தவும் சந்தை, சுங்கம், தரகு, மகிமை போன்ற வரிகளைத் தாரை வார்த்துக் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. அதை இன்னார் நடத்தி வைக்க வேண்டுமெனவும் கூறப்பெற்றுள்ளது.

<u>**கல்வெட்டு**</u>

1. கலியுகாதி சாலிவாகன சகாப்தம் 1444 ல் விஜயநகரம் ஸ்ரீ கிருஷ்ண தேவ மகாராயர் கொங்கின் வீர சோழ மண்டலத்துக் குன்றத்தூர் துர்க்கத்தைச் சூழ்ந்த பன்னிரண்டு பற்றுத் திரியம்பக உடையார்.

2. கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் ஸ்ரீ அர்த்தநாரீச்சுரமுடைய தம்பிரானாருக்கு உத்திராட நட்சத்திரத்தில் சுவஜாரோகமும் ரேவதி நட்சத்திரத்தில் தெப்பத் திருநாளும் நடத்தத்தக்கதாகச் சந்தையிலுண்டான சுங்கம் தரகு மகிமை முதலியவைகளைத் தாரை வாத்துக் கொடுத்ததாக ....

3. இந்த தர்மத்தைக் குன்றத்தூர் துர்க்கத்துக்கு வந்த அரசுகளும் இத்தானத்துக்கு வந்த அதிகாரிகளும்

இந்நாட்டண்மைக்காரக் கவுண்டர்களும் நடத்தி வைக்க...

### 23. திருச்செங்கோடு கயிலாயநாதர் கோவில் தெற்குப்புறச்சுவரின் கீழ்த்தளம்

காலம் : 21.04.1561

செய்தி : பிராமானந்தபூபன் என்பவர் கயிலாயநாதர் கோவிலில் கற்றூண் ஒன்றைக் கொடையாக எடுப்பித்தார். தன்னுடைய புகழும் பெருமையும் என்றும் நிலைக்கும் பொருட்டு இக்கொடையை அளித்தார். இக்கல்வெட்டு ஆசிரிய விருத்தப்பாவால் அமைந்துள்ளது.

<u>கல்வெட்டு</u>

1. சீரார சகத்த்திலாயிர தென்னனூறு செல்க எண்பதி மூன்றின் மேற்திரமான துன்மதியினிற் சித்திரைத் (திங்கள் சேர்ந்த)
2. இருபத்தஞ்சினிற் பூராயி பூறுவபக்ஷம் சோம சத்தமியினிற் பூச மேனாளில் புவியாள் சதாசிவ மகாராசி (ர் ஜெகதேவு)
3. பூபாலனுக்கருள்செய் வீராதிவீர நரசிங்க ராம(ா)ஞ்சயன் மிக்கு கொங்கு நாடாளு னான் வீப்பிற்கு (ல சர்வயன்)
4. தேவகிரியாதிபன் பிறாமனந்த பூபன் ஏரான செஹ்றகொடை வேலர் கயிலாய(ர்) முன
5. எழிலான கற்கம்ப மெடுத்தே நிறுத்திநின் கீற்திப்பி(ற்கு)
6. மநு இம்சேதளவு னிற்கவே சோதி உண்ணாமுலை கொ

: திருச்செங்கோடு வேலர் சன்னதியில் முன் மண்ட வடக்குத் திசையின் வெளிப்புறச்சுவர்

காலம் : கி.பி.1600

செய்தி : கீழக்கரைப் பூந்துறை நாட்டு மோரூரில் இருக்கும் திருமலை அத்தப்ப நல்லதம்பி காங்கேயன் முருகன் கோவில் முன் மண்டபம் கட்டுவித்தமை.

கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் 1522
2. இதன்மேற் செல்லாநின்ற சார்வாரி சித்திரை மாதம்
3. கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் மோரூரில் இருக்கும்
4. வேளாளக் கண்ணர்களில் திருமலை அத்தப்ப
5. நல்லதம்பிக் காங்கேயன் உபயம்

: திருச்செங்கோடு அர்த்தநாரீசுவரர் கோவிலின் மேற்குப்புற வெளிச்சுவர் விநாயகர் சிலையின் பின்புறம்

காலம் : கி.பி.1600

செய்தி : பூந்துறைநாடு மோரூர் அந்தப்ப நல்லதம்பி காங்கேயன் அர்த்தநாரீசுவரர் சன்னதிக்கு ஒட்டுக்கால் எட்டும் சித்திர கண்டக்கால் எட்டும் மேல் தளவரிசையுடபட அளித்துத் திருப்பணி செய்தமை.

கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் 1522
2. இதன்மேற் செல்லாநின்ற சார்வாரி வருடம் சித்திரை
3. கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் மோரூரில் இருக்கும்
4. வெள்ளாழக் கண்ணர்களில் திருமண லயத்தப்ப
5. நல்லதம்பிக் காங்கேயன் உபயம்
6. வெரியாண்டாவர் சன்னதி நிறுத்த மண்டபம் அணி
7. ஒட்டிக்கால் எட்டு சித்திர கண்டக்கால்
8. எட்டுயிதுக்குண்டாத பாவுக்கால்
9. தளவரிசை உட்பட முற்றுப் பெறுவித்தான்
10. அனேக தற்மம்



பேளூர் தான்தோன்றீஸ்வரர் கோயில் கோபுரம்





உத்தம சோழபுரம் கரபுர நாதர்
கோயிலுள்ள ஔவையார் சிலை

# எமது வெளியீடுகள்

1. *கல்சொல்லும் கதைகள் (கட்டுரைகள்)*
2. *சங்காலத்து பிராமி*

   *கல்வெட்டெழுத்துக்கள் (கட்டுரைகள்)*
3. *வடுவின் ஆழம் (சிறுகதைகள்)*
4. *சாபம் (சிறுகதைகள்)*

**பிரியா பதிப்பகம்**

2/10, முத்தாக்கவுண்டர் தோட்டம்,
சந்தியூர் - அஞ்சல்,
மல்லூர்- வழி
சேலம் - மாவட்டம் - 636 203

